# ॥ श्री शिवनाम अष्टोत्तरशतम् ॥

# ஸ்ரீ சிவநாம அஷ்டோத்தர சதம்

மூலமும்

ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர், ஸ்ரீ பாஸ்கர ராயர்

ஆகியோர் கருத்தைத் தழுவி

ஸாஹித்ய வாங்முக பூஷணம்

பிரும்மஸ்ரீ. ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா

இயற்றிய தமிழுரையும்

ஸ்ரீராம ஜயம்
[illegible]
[illegible]

**N. இராஜம் & கோ.**

வேப்பேரி, மதருஸ்-7.

Copy Right ] 1950 [Price. As. 15

R. S. VADHYAR & SONS,
Book-Sellers & Publishers,
KALPATHI

[illegible]—Copies. 1000—1950.



**"வைதிக தர்ம வர்த்தினி"**

**(தர்ம பிரசார மாத வெளியீடு)**

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா.

சந்தாதார் ஆருக. வருஷ சந்தா ரூ. 3/4

2/218, தம்பு செட்டி தெரு, சென்னை-1.

# ஸ்ரீசிவநாமாஷ்டோத்தர சத நாமாவளி:

## அவதாரிகை

காசி முதல் கன்யாகுமரி வரையில் ஒவ்வோர் சிவாலயத்திலும் வைதிக பஞ்சாயதந பூஜை நடக்கும் கிருஹத்திலும் சிவநாமாஷ்டோத்தர சதார்ச்சனை நடைபெறுகிறது. பல சிவநாமாஷ்டோத்தரங்களிருந்தும் இதே பெரும்பாலோரால் அனுஷ்டிக்கப் படுகிறது. இது பதினெண் புராணங்களில் பதிமூன்றாவதான ஸ்காந்த புராணத்தில், ஸநத்குமாரீ, ஸூதஸம்ஹிதா, பிராஹ்மீ, வைஷ்ணவீ, சாங்கரீ ஸௌரீ, எனும் ஆறு ஸம்ஹிதைகளில் ஐந்தாவதான சாங்கரீ ஸம்ஹிதை சிவரஹஸ்ய கண்டத்தில் கௌரீ நாராயண ஸம்வாதத்தில் அமைந்துள்ளது. உமையவள் தன் ஸஹோதரரான ஸ்ரீநாராயணனை நாடி "எனக்குச் சிவனுடைய பாதி சரீரம் கிடைக்கத்தக்கதும் சீக்ரமாய் பலனை அளிப்பதுமான ஸ்தோத்திரத்தைக் கூறு" என்று கேட்பது முதல் சுலோகம். "படிப்பவர்களுக்கு விரைவில் பயனளிக்கும் ரஹஸ்யமான சிவனது நூற்றெட்டு நாமாக்களைச் சொல்கிறேன் கேள்" என்பது இரண்டாவது சுலோகம். த்யாந சுலோகம் ஒன்று. ஆக ஆரம்பத்தில் 3. நாமாவளி 13, சுலோகங்களாலும் பலச்ருதி 5 சுலோகங்களாலும் வர்ணிக்கப்படுகிறது. ஆக 21. சு. பதிமூன்றே சுலோகத்தில் லலிதமாக சிவதத்துவத்தை வெளியிடும் வேறு அஷ்டோத்தரமில்லை எனலாம்.

ஒரு மந்த்ரத்தைப் பெற்று அதனால் பயனை அடைந்தவர் அதற்கு ரிஷியாவர். அம்பிகை கோரும் சிவனது அர்த்தாங்கத்திற்கு ஸாதநம் இவ்வஷ்டோத்தரம் என்று கூறும் ஸ்ரீநாராயணன், இதனால் தானும் சிவார்த்தாங்கத்தைப் பெற்றுச் சங்கர நாராயணன் என அழைக்கப்படுவதால் அவ்வுபதேசத்திற் கேற்றவர் விஷ்ணுவே என்பது திண்ணம். இதனால் கொண்டாடப்படும் தைவம் ஸதாசிவன். இதன் உபதேச குருசிவார்த்தாங்கம் பெற்ற மஹா

விஷ்ணு. இவ்வுபதேசத்தால் சிஷ்யையான தேவி சிவார்த் தாங்கம் பெற்றாள். ஆதலின் மந்த்ரம் தேவதை குரு இம் மூன்றும் ஒன்றாகக் கருதப்படல் வேண்டுமென்ற மந்த்ர சாஸ்திர ஸித்தாந்தப்படி அம்மூன்றும் சிவமானதுடன், தேவியும் அத்துடன் சேர்ந்தாள். ஆதலின் இதன் சிறப் பிற்கு இது இரண்டாவது காரணமாம். இதற்கு லக்ஷ்ய மான சிவனே வேதாந்தப்ரதிபாத்யமான பொருள். அது அரூபமாயும் ஸரூபமாயும் இருந்து உலக நன்மை புரிகிறது. கேவல நாமரூப மற்ற பரமாத்மாவைப் பூஜிக்கவோ, துதிக் கவோ முடியாது. அவரே நாமரூபங்களை ஏற்று எங்கும் நிறைந்தவர் எனக் காட்ட ச்மசானம் முதல் கைலாஸம் வரை யிருக்கின்றார். இத்தகைய உத்தம வஸ்துவை ஆச் ரயித்தது மூன்றாவது சிறப்பாகும். கர்மகாண்டம் உபா ஸனா காண்டம் யோகம் ஞானகாண்டம் இவைகளில் கூறிய சகல தத்துவங்களையும் இந்நாமாவில் புகுத்திருப் பது நான்காம் சிறப்பாம். குருவிற்கும் சிஷ்யனுக்கும் உட னே பலனை அளித்ததென்பது ஐந்தாவது சிறப்பாகும். வேதபுராண ப்ரஸித்தமானவை என்பது ஆறாவதாகும்.

சுருக்கமாகவும் லலிதமாகவும் இருத்தல், உத்தம குருவால் உத்தம சிஷ்யைக்கு உபதேசிக்கப்பட்டது, உத் தம வஸ்துவைக் குறிப்பது, ஸகல ஸாதநங்களையும் தனக் குள்ளே அடங்கியது, உடனே பலனை அளிப்பது, வேத புராணங்களால் வர்ணிக்கப் பட்டது என இதை போன்ற மற்றும் பல காரணங்களால் இது மிகமிக உயர்ந்ததென விளங்குகிறது.

இதில் பெரும்பாலான நாமாக்கள் வேதத்தினுல் அப் படியே கூறப்பட்டவைகள். சிவநாமாக்கள் நேராக அப் படியே கூறப்படாவிடினும், இதன் அர்த்தம் ச்ருதியில் வர்ணிக்கப்படுவதால் அர்த்தத்தினுல் ச்ருதி கூறியவைகளா கும் * மற்றவை புராணங்களில் கூறப்பட்டு ப்ரஸித்த

* "அம்பிகாபதயே" என்று ச்ருதிப்ரஸித்தி. "அம்பிகாநாத" என்பதிங்குளது.

மானவை. ஆகமங்களால் வர்ணிக்கப்பட்டு ஆலயங்களில் அமைக்கப்பட்ட இருபைத்தைந்து மூர்த்திகளின் நாமாக்கள் (இரண்டு மூன்றுகளைத் தவிர) பெரும்பாலும் இங்கு கூறப்படுவதால் ஆகமப்ரஸித்த நாமக்களுமாகும். இவை ஆங்காங்கு குறிக்கப்பட்டிருக்கின்றன. அன்றியும் "சிவசக்த்யைக்யரூபிணீ" என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமாவில் வர்ணிக்கப்பட்ட அங்குமிங்கும் சிலநாமக்கள் †அப்படியே அமைந்துளதும் மற்றவை அர்த்தம் பொருந்தியவைகளுமாகும். 28 நாமாக்கள் இரண்டிலும் ஏகமாயிருத்தல் ஆங்காங்கு குறிக்கப்பட்டிருக்கின்றன. முதல் மூன்று நாமாக்கள் இவர் பரமாத்மா, ஸ்ருஷ்டி ஸ்திதி லய கர்த்தா, "ஜன்மாத்யஸ்யயத:', என்ற ப்ரம்ம ஸூத்ரத்தால் வர்ணிக்கப்பட்டவர் என்பதை விளக்குகின்றன. "ஸ்வரமய" முதல் "பரமாத்மாசஎன்ற வரையிலுள்ள நாமாக்களும், 14, 54, 57, 58, 59, 62, 68, 71, முதல் 75, 79, 80, 82, 87, 89, 90, முதல் 95, முதல் 102 முதல் 108 வரை உள்ள நாமாக்களும் இந்த முதல் 3 நாமார்த்தத்தைப் பூர்ணமாக விளக்கி வியாக்யாநம்போலமைந்திருக்கின்றன. மற்றவைகளும் இந்த தத்துவத்தயே பரம்பரையாக்க் கூறினும் இதர அர்த்தத்தையும் விளக்குகின்றன. சசிசேகர முதலிய 8 நாமாக்களும் மற்றும் சிலதும் லோகாநுக்ரஹத்திற்காகவும் பக்தர்கள் உபாஸிப்பதற்காகவும் ஸகுண மூர்த்தியாகத் தோன்றி உபாஸனா காண்டத்திற்கு விஷயமாகினர் என்பதைக் காட்டுகின்றன. விஷ்ணு வல்லப: அம்பிகாநாத: பக்தவத்ஸல: சிதிகண்ட: கங்காதர: மிருத்யுஞ்ஜய: முதலிய சிலநாமாக்கள் பக்தாநுக்ரஹதத்பரரா யிருப்பதையும பக்தி காண்டத்திற்கு லக்ஷ்யமாயிருப்பதையும் காட்டுகின்றன ஹவி: யஞ்ஞமய: ஸோம: என்பது போன்ற சிவ நாமாக்கள் கர்ம காண்டத்திலும் இவரே போற்றப்படு

---

† சிவ: சிவா, மஹேச்வர: மஹேச்வரீ: சம்பு, சாம்பவீ சசிசேகர: சாருசந்த்ரகலாதரா; சங்கர, சாங்கரீ,

கிறார் என்பதைக் காட்டுகின்றன. புஜங்க பூஷண: அநேகாத்மா முதலியவை இவர்யோகி யோகத்தாலறியத் தக்கவரென எண்பிக்கின்றன. பூஷதந்தபித், தக்ஷாத்வரஹர: பகநேத்ரபித் எனும் நாமாக்கள் சிவத்வேஷத்தை ஸஹியாத அம்பிகையின் பிரார்த்தனைக் கிணங்கி துஷ்ட சிக்ஷணம் செய்தார் என்ற பக்த வாத்ஸல்யத்தைக் காட்டுகின்றன. அந்தகாஸுரஸூதந: கங்காதர:காமாரி: நீலலோஹித: சூலபாணி: என்பன ஹரிஹர அபேதத்தை காட்டுகின்றன. அம்பிகாநாத: என்பது போன்ற நாமாக்கள் புராணகதைகளை விளக்குகின்றன. மற்றும் பற்பல தத்துவங்களையும் விளக்குகின்றன. புராணங்களெல்லாம் வெறும் கதைகளை மாத்ரம் சொல்ல வந்தவைகளல்ல. கதையுடன் நீதியையும் வேதாந்த ரஹஸ்யத்தையும் அதிகாரிகளுக் கேற்றபடி கூறும்.

உதாரணமாக சசிசேகர: என்ற நாமாவைக் கவனித்தால் சந்த்ரன் தக்ஷன்கன்யகை 27 பெண்களை மணந்து ரோஹிணியிடத்தில் மாத்ரம் அதிக பக்ஷம் கொண்டு மற்ற மனைவிகளை மதிக்கவில்லை: தக்ஷன் இது தவறு இனி இங்ஙனம் செய்யாதே என எச்சரித்தான். மறுபடியும் அதே மாதிரி நடந்ததால் தக்ஷனால் சபிக்கப்பட்டுச் சிவனைச் சரணமடைந்தான். குருத்ரோஹம் செய்துமவரைச் சரண் புகுந்தான். அவர் அபயமளித்து அவனைத் தலைமீது அணியாக அணிந்தார் என்பது புராணகதை. இதிலிருந்து பக்ஷபாதங்கூடாது சிவன் சரணாகத வத்ஸலன். ஸர்வ வல்லமையுள்ளவன் என்று பல பல நீதிகள் தோற்றுகின்றன. சந்த்ரன் என்பது ஞானம் அல்லது ஸர்வஜீவ ஸமஷ்டி என்பது வேதாந்தார்த்தமாம். இங்ஙனமே சூலம் ஜடை பரசு முதலியவைகளைத் தரித்திருந்தாலும் வேதாந்த ரஹஸ்யத்தையே விளக்குவதாக சிவநாமாஷ்டோத்தரசதத்திற்கு "சிவதத்துவ ரஹஸ்யம்" எனும் விரிவுரை எழுதிய ஸ்ரீமான் நீலகண்டதீக்ஷிதாவர்கள் விளக்குகிறார்கள்:

ज्ञानचन्द्रकलाचूडः खट्वाङ्ग शुद्धसत्त्वकः ।
त्रैगुण्यं शूलमेतस्य परशुः सत्यनिष्ठता ॥

"அறிவென்னும் சந்த்ரனைச் சிரோபூஷணமாக உள்ள
வன். கட்டில் காலென்னும் சுத்த ஸத்வகுணமுள்ளவன்.
த்ரிகுண வடிவமானது இவன் சூலம். பரசுவென்பது
ஸத்திய ஸ்வரூபம்" எனும் வராஹ புராண வசனத்தால்
ஸகுணமாயினும் ஸதாசிவன் கேவல பரபிரும்மமே என
செவ்வனே விளங்குகிறது.

இத்தகைய மஹாமஹிமை வாய்ந்த இதைச் சுசியாக
மூன்றுகாலம் படிப்போர் இஷ்டஸித்தியைப் பெறுவர்.
கேவலஸ்துதிக்கே இத்தகைய மஹிமை உண்டு. பரமாத்ம
ஸாந்நித்யம் வாய்ந்த சிவாலயத்தில் இதைப் பாராயணம்
செய்தாலோ அல்லது அர்ச்சனை செய்வித்தாலோ அதனு
லுண்டாகும் பயனைப் பற்றிக் கூறவும் வேண்டுமா?

சிவலிங்கம் எப்படி தனி நிர்குணமும் தனிஸகுண
மாக இல்லாமல் நடுவாக இருக்கின்றதோ அங்ஙனமே
பாராயணமெனும் ஜபயஞ்ஞமும் மானஸிகமும் காயிகமு
மாக இல்லாமல் மத்யமான வாசிகதபஸ்ஸாகும். இது
ச்ரத்தை உள்ளவர்களுக்குக் கடினமான விஷயமல்ல.
"नामपारायणप्रीता" நாம பாராயணத்தால் ஸந்தோஷமடை
கிறவள் என ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமங் கூறுகிறது. பாரா
யணத்தால் சிவனருள் பெறலாம். "यज्ञानां जपयज्ञोऽस्मि"
யஞ்ஞங்களில் ஜபயஞ்ஞமாக இருக்கிறேன், என கீதா
சார்யன் விபூதியோகத்தில் வர்ணிக்கின்றார். இதில் ஹிம்
ஸாதிகளில்லாததாலும் சரீர ப்ரயாஸம் தநவ்யயம் முதலிய
வைகளில்லாததாலும் ஜபயஞ்ஞம் மிகச் சிறந்ததென
பாஷ்யகாரர்கள் கூறுகின்றனர்.

जपमावर्तयन्नित्यं जपन्वैब्रह्मचारिकं ।
तदर्थबुद्ध्या संयाति मनसा जापकः परम् ॥

நித்யம் ஜபத்தை ஆவர்த்தி செய்துக்கொண்டு பிரும்மசாரியாக (பிரும்மஸ்வரூபமான) மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு அதன் அர்த்தத்தைப் புத்தியால் உணர்ந்து மந்த்ரம் ஜபிப்பவன் பரமாத்ம ஸ்வரூபத்தை அடைகிறான்." என்ற பாரத ஜாபகோபாக்யாந சுலோகத்தால் அர்த்தமும் உணர்ந்து ஜபம் செய்பவர் எளிதில் ஸத்கதி அடையலாமென நிச்சயமாகின்றது.

कोटयो ब्रह्महत्यानां अगम्यागमकोटयः ।
सद्यो विलयतां यान्ति महादेवेतिकीर्तनात् ॥

ஒருமுறை மஹாதேவ எனக் கூறினால் கோடி கோடியான பிரும்ம ஹத்திகளும் தகாதவரைப் புணர்ந்த பாபமும் லயித்து விடும் என சிவபுராண வசநமிருக்க, ஒருமுறை சிவ எனக் கூறினால் போதாதா? 108 நாமஜபம் செய்யவேண்டுமா? அதிலும் ஒருமுறை போதாதா? தினம் மும்முறை ஜபிக்கவேண்டுமா? என சங்கை நிகழலாம். "ஒரு நாமாவுக்கு எவ்வளவு பாபத்தைப் போக்கடிக்கச் சக்தியிருக்கிறதோ அவ்வளவு பாபத்தைச் செய்ய பாபியால் முடியாது" என நாமாவுக்கு மஹிமை இருப்பதும் பாபமகலுவதும் உண்மையே. ஆனால் அதற்குப் பிறகு நாம் பாபம் செய்யாமலிருப்போமா? அன்றியும் நாமாவை அதன் சப்தார்த்த விசேஷங்களை உணர்ந்து ஆழ்ந்த பக்தியில் ஈடுபட்டு என் பாப மூட்டைகள் ஒழியவேண்டும் என உள்ள முருக நாம ஜபமும் செய்கிறோமா? பாபமகன்றாலும் வாஸனை உள்ளே இருந்து மநதினாலோ உடலாலோ ஒரு பாபத்தைச் செய்யத் தூண்டுமல்லவா? அதற்காக் அந்த பாப வாஸனையும் ஒழிய இந்த ஸத்வாஸனை ஏற பலமுறை ஜபிக்க வேண்டியதுதான். கார்யமாகும் வரை ஜபித்துப் பின்னர் மறப்பது அதமமாகும். ஆயினும் நமது பாபம் அகலும் வரையிலாவது ஜபிக்கத்தான் வேண்டும். பாபமகன்றது என்பதற்கு லக்ஷணம் மேல்மேலும் புண்யம்

செய்வதேயாகும். அன்றியும் நாமஜபம் செய்யும்போது உண்டாகும் ஆநந்தம் அனுபவத்தால்தான் அறியத்தக்கது. ஜபிப்போர் இந்த வாதம் செய்யார். வாதம் செய்தாலோ பாபமகலவில்லை என்பது ஸ்பஷ்டமாகிறது. அன்றியும் " आवृत्तिरसकृदुपदेशात् " 4-1-1 என்ற பிரும்மஸூத்திரத்தில் ச்ரவணமனனாதிகளை ஒரு முறை செய்தால் போதாதா? என்று கேட்க அடிக்கடி உபதேசிக்கப் பட்டிருப்பதால் அடிக்கடி செய்யவேண்டியதுதான் என ஸூத்ரபாஷ்யம் முடிவுகட்டியிருப்பதாலும் சிஷ்டர்கள் ஆயிரம் அல்லது ஆயிரம் பகவந்நாம ஜபம் செய்யாமல் உண்பதில்லை என்ற சிஷ்டாசாரத்தினாலும் மும்முறை இதை ஜபிப்பதுடன் ஸதா பகவந் நாமாவைச் சொல்லிக் கொண்டே இருத்தல் வேண்டும்.

இதில் பெரும்பாலும் சிவபக்தாக்ரேஸராயிருந்து மந்த்ரி பதவியும் வகித்து சிவபூஜா துரந்தரரான ஸ்ரீ நீலகண்டதீக்ஷிதர்வாள் எழுதிய சிவதத்துவ ரஹஸ்யத்தை ஒட்டியே அர்த்தங்கள் எழுதப் பட்டிருக்கின்றன. ஆங்காங்கு ச்ருதிப்ரஸித்த நாம எது? புராணப்ரஸித்த நாம எது? ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமாவுடன் ஒத்திருக்கும் நாம எது? எந்தெந்த நாம மஹேச்வராவதாரமான 25 மூர்த்திகளின் பெயர்? எந்தெந்த நாம ஐதிஹ்யம் எந்த க்ஷேத்திரத்தில் நடைபெற்றது? என்பது போன்ற விவரங்கள் ஆங்காங்கு குறிக்கப் பட்டிருக்கின்றன. பல வருடங்களாக இத்தொண்டில் ஈடுபட அவா இருந்தது.

அதைப்பூர்த்தி செய்விக்க இதை அச்சிட முன்வந்த ஸ்ரீராஜம் கம்பெனியாருக்குச் சிவகாமியுடன் கூடிய சிவகாமேச்வரரருளால் மேன்மேலும் செல்வமும் சிரத்தையும் உண்டாக வேண்டுகிறேன்.

गच्छतः स्खलनं क्वापि भवत्येव प्रमादतः
हसन्ति दुर्जनास्तत्र समादधति साधवः ॥

"நடப்பவன் தவறி விழுதல் கூடும் துர்ஜநர் நகைப்ப ஸாதுக்கள் ஸமாதானம் செய்வர்" என்றபடி புத்தி மாந் யத்தாலும் தவறுதலாலும் பல குற்றங்கள் நிகழ்வ ஸஹஜம். அதைத்திருத்தி அன்புடன் மற்றும் இதற்கு தேவையான விஷயங்களையும் சிவனடியார்கள் தெரிவி தால் அவரருளிருந்து அடுத்தப்பதிப்பும் வெளிவந்தா அச்சமயம் அவைகளைச் சேர்க்கலாம்.

अपराधसहस्राणि क्रियन्तेऽहर्निशं मया ।
दासोऽयमिति मां मत्वा क्षमस्व परमेश्वर ॥

அமரகலா விலாஸிநீ
சாந்தாச்ரமம்
ஸ்டேஷன் ரோட்,
மேல மாம்பலம்.
சென்னை

இங்ஙனம்
அடியாரடி பணியும்
ஸ்ரீவத்ஸ வே. சோமதேவ சர்ம





# शिवाष्टोत्तरशतनामस्तोत्रम्

श्रीगणेशाय नमः ॥

पार्वत्युवाच—

शरीरार्धमहं शंभोर्येन प्राप्स्यामि केशव ।
तदिदानीं ममाचक्ष्व स्तोत्रं शीघ्रफलप्रदम् ॥

नारायण उवाच—

अस्ति गुह्यतमं गौरि नाम्नामष्टोत्तरं शतम् ।
शंभोरहं प्रवक्ष्यामि पठतां शीघ्रकामदम् ॥

नारायण ऋषिः । अनुष्टुप्छन्दः । सदाशिवो देवता ।

ध्यानम्

धवलवपुषमिन्दोर्मण्डले संनिविष्टं
भुजगवलयहारं भस्मदिग्धाङ्गमीशम् ।
हरिणपरशुपाणिं चारुचन्द्रार्धमौलिं
हृदयकमलमध्ये संततं चिन्तयामि ॥

शिवो महेश्वरः शंभुः पिनाकी शशिशेखरः ।
वामदेवो विरूपाक्षः कपर्दी नीललोहितः ॥ १ ॥

शंकरः शूलपाणिश्च खट्वाङ्गी विष्णुवल्लभः ।
शिपिविष्टोऽम्बिकानाथः श्रीकण्ठो भक्तवत्सलः ॥ २ ॥

भवः शर्वस्त्रिलोकेशः शितिकण्ठः शिवाप्रियः ।
उग्रः कपाली कामारिरन्धकासुरसूदनः ॥ ३ ॥

गङ्गाधरो ललाटाक्षः कालकालः कृपानिधिः ।
भीमः परशुहस्तश्च मृगपाणिर्जटाधरः ॥ ४ ॥

कैलासवासी कवची कठोरस्त्रिपुरान्तकः ।
वृषाङ्को वृषभारूढो भस्मोद्धूलितविग्रहः ॥ ५ ॥

सामप्रियः स्वरमयस्त्रयीमूर्तिरनीश्वरः ।
सर्वज्ञः परमात्मा च सोमसूर्याग्निलोचनः ॥ ६ ॥

हविर्यज्ञमयः सोमः पञ्चवक्त्रः सदाशिवः ।
विश्वेश्वरो वीरभद्रः गणनाथः प्रजापतिः ॥ ७ ॥

हिरण्यरेता दुर्धर्षः गिरीशो गिरिशोऽनघः ।
भुजङ्गभूषणो भर्गो गिरिधन्वा गिरिप्रियः ॥ ८ ॥

कृत्तिवासाः पुरारातिः भगवान्प्रमथाधिपः ।
मृत्युञ्जयस्सूक्ष्मतनुर्जगद्व्यापी जगद्गुरुः ॥ ९ ॥

व्योमकेशो महासेनजनकश्चारुविक्रमः ।
रुद्रो भूतपतिः स्थाणुर्हिर्बुध्न्यो दिगम्बरः ॥ १० ॥

अष्टमूर्तिरनेकात्मा सात्विकश्शुद्धविग्रहः ।
शाश्वतः खंडपरशुरजः पाशविमोचकः ॥ ११ ॥

मृडः पशुपतिर्देवो महादेवोऽव्ययो हरिः ।
पूषदन्तभिदव्यग्रो दक्षाध्वरहरो हरः ॥ १२ ॥

भगनेत्रभिदव्यक्तस्सहस्राक्षस्सहस्रपात् ।
अपवर्गप्रदोऽनन्तस्तारकः परमेश्वरः ॥ १३ ॥

एवं श्रीशंभुदेवस्य नाम्नामष्टोत्तरं शतम् ॥

एतदष्टोत्तरं नाम्नां शतमाम्नाय संमितं ।
शंकरस्य प्रिया गौरी जप्त्वाशंभुप्रसाददं ॥

त्रैकाल्य मन्वहं देवी वर्षमेकं प्रयत्नतः ।
अवाप सा शरीरार्धं प्रसादात् शूलपाणिनः ॥

यस्त्रिसन्ध्यं पठेन्नित्यं नाम्नामष्टोत्तरं शतम् ।
शतरुद्रत्रिरावृत्या यत्फलं लभते नरः ॥

तत्फलं प्राप्नुयान्नित्यं एकावृत्या नसंशयः ।
सकृद्वा नामभिः पूज्य कुलकोटिं समुद्धरेत् ॥

बिल्वपत्रैः प्रशस्तैश्च पुष्पैश्च तुलसीदलैः ।
तिलाक्षतैर्यजेत् यस्तु जीवन्मुक्तो नसंशयः ॥

---

# சிவாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரம்.

ஸ்ரீகணேசாய நம:

பார்வத்யுவாச—

சரீரார்த்த மஹம்சம்போர்யேன ப்ராப்ஸ்யாமி கேசவ
ததிதானீம் மமாசக்ஷ்வ ஸ்தோத்ரம் சீக்ரபலப்ரதம்.

நாராயண உவாச—

அஸ்தி குஹ்யதமம் கௌரி நாம்நாம ஷ்டோத்தரம் சதம்
சம்போரஹம்ப்ரவக்ஷ்யாமி படதாம் சீக்ரகாமதம்.
நாராயணருஷி: அனுஷ்டுப்சந்த: ஸதாசிவோதேவதா

த்யானம்.

தவளவபுஷமிந்தோர்மண்டலே ஸன்னிவிஷ்டம்
புஜகவலயஹாரம் பஸ்மதிக்தாங்கமீசம்
ஹரிண பரசு பாணிம் சாருசந்த்ரார்த்த மௌளிம்
ஹ்ருதய கமலமத்யே ஸந்ததம் சிந்தயாமி.

சிவோ மஹேச்வர: சம்பு: பிநாகீ சசிசேகர:
வாம தேவோ விரூபாக்ஷ: கபர்தீ நீலலோஹித: (1)

சங்கர: சூலபாணி: ச கட்வாங்கீ விஷ்ணு வல்லப:
சிபிவிஷ்டோம் பிகாநாத: ஸ்ரீகண்டோ பக்தவத்ஸல: (2)

பவ: சர்வஸ்த்திரிலோகேச: சிதிகண்ட: சிவாப்ரிய:
உக்ர: கபாலீ காமாரிரந்தகாஸுர ஸூதன: (3)

கங்காதரோ லலாடாக்ஷ: காலகால: க்ருபாநிதி:
பீம: பரசு ஹஸ்தச்ச ம்ருக பாணிர் ஜடாதர: (4)

கைலாஸவாஸீ கவசீ கடோரஸ் திரிபுராந்தக:
வ்ருஷாங்கோ வ்ருஷபாரூடோ பஸ்மோத்தூலித விக்ரஹ
ஸாமப்ரிய: ஸ்வரமயஸ் த்ரயீ மூர்த்திர நீச்வர:
ஸர்வக்ஞ: பரமாத்மா ச ஸோமஸூர்யாக்னி லோசன: (6)

ஹவிர்யக்ஞமய: ஸோம: பஞ்சவக்த்ர: ஸதாசிவ:
விச்வேச்வரோ வீரபத்ர: கணநாத: ப்ரஜாபதி: (7

ஹிரண்யரேதா துர்தர்ஷஃ கிரீசோ கிரிசோனகஃ
புஜங்கபூஷணோ பர்கோ கிரிதன்வா கிரிப்ரியஃ (8)
க்ருத்திவாஸாஃ புராராதிஃ பகவான் ப்ரமதாதிபஃ
ம்ருத்யுஞ்ஜயஸ் ஸூக்ஷ்மதனுர் ஜகத்வ்யாபீஜகத்குருஃ (9)
வ்யோமகேசோ மஹாஸேன ஜனகச்சாரு விக்ரமஃ
ருத்ரோ பூபதிஃ ஸ்தாணுரஹிர்பூத்ர்யோ திகம்பரஃ (10)
அஷ்டமூர்த்திரநேகாத்மா ஸாத்விகச் சுத்த விக்ரஹஃ
சாச்வதஃ கண்டபரசு ரஜஃ பாசவிமோசகஃ (11)
ம்ருடஃ பசுபதிர்தேவோ மஹாதேவோவ்யயோ ஹரிஃ
பூஷதந்த பிதவ்யக்ரோ தக்ஷாத்வர ஹரோ ஹரஃ (12)
பகநேத்ர பிதவ்யக்தஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்
அபவர்க ப்ரதோநந்தஸ் தாரகஃ பரமேச்வரஃ (13)
ஏவம் ஸ்ரீசம்புதேவஸ்யநாம்நா மஷ்டோத்தரம் சதம்.
ஏததஷ்டோத்ரம் நாம்னும் சதம்ாம்னய ஸம்மிதம்
சங்கரஸ்ய ப்ரியா கௌரீ ஜப்த்வாசம்பு ப்ரஸாததம்
த்ரைகால்யமன்வஹம் தேவீ வர்ஷமேகம் ப்ரயத்னதஃ
அவாப ஸா சரீரார்த்தம் ப்ரஸாதாத் சூலபாணினஃ
பஸ்திரி ஸந்த்யம் படேந்நித்யம் நாம்னு மஷ்டோத்தரம்
சதருத்ர த்ரிராவ்ருத்ய யத்பலம் லபதேநரஃ [சதம்
தத் பலம் ப்ராப்னுயாந்நித்யம் ஏகாவ்ருத்யாந ஸம்சயஃ
ஸக்ருக்த்வா நாமபிஃ பூஜ்ய குலகோடிம் ஸமுத்தரேத்
பில்வபத்ரைஃ ப்ரசஸ்தைச்ச புஷ்பைச் ச துலஸீதலைஃ
திலாக்ஷதைர்யஜேத்யஸ்து ஜீவன்முக்தோ நஸம்சயஃ

**ாவத்யுவாச** - பார்வதி கேட்கிறாள்.

शरीरार्धमहं शंभोः येनप्राप्स्यामि केशव ।
तदिदानीं ममाचक्ष्व स्तोत्रं शीघ्रफलप्रदम् ॥

ார்வத்யுவாச
சரீரார்த்தமஹம் சம்போஃ யேனப்ராப்ஸ்யாமி கேசவ
ததிதானீம் மமாசக்ஷ்வ ஸ்தோத்ரம் சீக்ரபலப்ரதம்.

ஓ கேசவ! எந்த ஸ்தோத்திரத்தினல் நான் பிர
சிவத்தின் பாதி உடலைப் பெறுவேனே. சீக்கிரம் பயனை
தருவதான அத்தகைய ஸ்தோத்திரத்தை இப்பொழு
எனக்குக் கூறும்.

**नारायण उवाच** - நாராயணர் கூறினர்.

**अस्ति गुह्यतमं गौरि नाम्नामष्टोत्तरं शतम् ।**
**शंभोरहं प्रवक्ष्यामि पठतां शीघ्रकामदम् ॥**

நாராயண உவாச
அஸ்தி குஹ்யதமம் கௌரி நாம்னமஷ்டோத்தரம் சதம்
சம்போரஹம் ப்ரவக்ஷ்யாமி படதாம் சீக்ர காமதம்.

ஓ கௌரி! அத்யந்தம் ரஹஸ்யமான சிவனது 108 நாம இருக்கின்றது. படிப்பவர்க்கு சீக்ரம் இஷ்டத்தை அளிப்பதான அதைக் கூறுகிறேன்.

## த்யானம்.

**धवळ वपुषमिन्दोः मण्डले सन्निविष्टं**
**भुजग वलय हारं भस्मदिग्धाङ्गमीशं ।**
**हरिण परशु पाणिं चारु चन्द्रार्ध मौळिं**
**हृदय कमल मध्ये सन्ततं चिन्तयामि ॥**

தவள வபுஷ மிந்தோ: மண்டலே ஸன்னிவிஷ்டம்
புஜக வலய ஹாரம் பஸ்ம திக்தாங்க மீசம்.
ஹரிண பரசு பாணிம் சாரு சந்த்ரார்த்த மௌளிம்
ஹ்ருதய கமல மத்யே ஸந்ததம் சிந்தயாமி.

பத அர்த்தம். **धवळ** வெண்மையான **वपुष** சரீரத்தை உடையவரும் **इन्दोः** சந்திரனுடைய **मण्डले** மண்டலத்தில் **सन्निविष्टं** வீற்றிருப்பவரும் **भुजग** பாம்பை, **वलय** வளையாகவும் **हारं** ஹாரமாகவும் உடையவரும் **भस्म** பஸ்மாவினல்

ந்தெ பூசப்பட்ட, अङ्ग அவயவங்களை உடையவரும் हरिण மான், परशु கோடாலி, (இவைகளை) पाणि கையிலே யவரும் चारु அழகிய, चन्द्रार्ध பாதிசந்திரனை मौलि சிரசில் அணிந்தவருமான ईशं ஸர்வேச்வரனை, हृदयकमल ஹ்ருதய மாகிற தாமரையின் मध्ये நடுவில் सन्ततं எப்பொழுதும் चिन्तयामि த்யானம் செய்கிறேன்.

வெளுப்பான உடல் உள்ளவரும் சந்த்ர மண்டலத் தில் இருப்பவரும் பாம்பை கங்கணமாகவும் ஹாரமாகவும் உடையவரும் விபூதிபூசிய உடல் உள்ளவரும் மானையும் கோடாலியையும் கையில் வைத்திருப்பவருமான பாதி சந் திரனைத் தலைமீது தரிக்கும் சிவனை ஹ்ருதய தாமரையின் இடையே அடிக்கடி நினைக்கின்றேன்.

ஸ்ரீசிவாப்யாம் நம:

# ॥ शिवनामाष्टोत्तरशतार्थः ॥

## ஸ்ரீசிவநாமாஷ்டோத்தர சதத்தின் அர்த்தம்.

### ஓம் சிவாய நம:

### ओं शिवाय नमः

(ஸ்ரீசிவா ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாம 998.)

பமான ஸர்வக்ஞுணமுள்ளவர். ஸ்வயம்சுபமானவர்; ல்லா உலகையும் தனக்குள்படுக்கவைத்திருப்பவர். அழ ானவர். உலக நன்மையை விரும்புபவர். மங்களத்தைச் ெய்பவர், எனவும் பொருளுண்டு.

शेतेऽस्मिं जगदीहते दिशति च श्रेयःप्रजानामसौ
शान्तिं याति समस्तमङ्गलगुणग्रामैकसीमायते ।
इच्छाशक्तिमुपैति निर्मलतरःशास्त्रे प्रकृत्येति च
व्याचष्टे शिवनाम यस्य विभवं तस्मै परस्मै नमः ॥

இவரிடம் உலகம் இருக்கிறது. உலகை விரும்புபவர். ஜனங்களுக்கு ச்ரேயஸ்ஸை அளிக்கிறார். சாந்தி அடைபவர். ஸமஸ்த மங்கள குணத்திற்கு இருப்பிடமானர். இச்சாசக்தியை அடைபவர். நிர்மலமானவர். என "சிவ" எனும் சொல் எவனதுமஹிமையை விளக்குகிறதோ அந்த பரம புருஷனுக்கு நமஸ்காரம். இது எல்லா நாமங்களிலும் மிகச்சிறந்தது. வேதத்தினல் சதருத்ரீயத்தில் பஞ்சாக்ஷரியில் ஜீவரத்னமாகக் கூறப்பட்டது. "தற்செயலாகக் கூறப்பட்டாலும் இது பாபத்தை அகற்றும். மஹாபாதகங்களை அகற்றுவது சிவ எனும் சொல் நம: என்பதுடன் சேர்ந்த பஞ்சாக்ஷரீ முக்தியையளிக்கும். எனஸ்மிருதிகளும் சிவ புராணமும் கூறுகின்றன.

"சண்டாளனுகயிருந்தாலும் சிவ எனும் சொல்லைச் சொல்வானுகில் அவ்னுடன் வஸிக்கலாம். அவனுடன் பேசலாம். அவனுடன் உண்ணலாம்." எனச்ருதி கூறுகிறது "ஒரு முறை ஏதோஒரு ப்ரஸங்கத்தால் சிவ எனும் இரு அக்ஷரமுள்ள பகவன் நாம கூறப்படின், அது மனிதர்களின் ஸகல பாபங்களையும் போக்குகிறது. பவித்ரமான கீர்த்தி உள்ளவனும் எவராலும் அலக்ஷ்யம் செய்ய முடியாதவருமான சிவனைச் சிவேதரனுன (அமங்களனுன) நீத்வேஷிக்கின்றுய் என தாக்ஷாயணி தக்ஷனைப்பார்த்து கூறுகிறுன். (ஸ்ரீபாகவதம்) அதனுல்தான் இது முதல்நாமாவாக அமைக்கப்பட்டுள்ளது.

ஸ்ாதுக்கள் எப்பொழுதும் சிவ சிவ எனக் கூறுவது இதனுல்தான். அவனே இவனே என்பதை விட்டு சிவனே சிவனே என்று கூறென்பது பழமொழி. "வசகாந்தௌ" எனும் தாதுவிலிருந்து தோன்றி, அக்ஷரமாறுதலால் ஹிம்ஸ என்பது ஸிம்ஹ என்றுனது போலும். பச்யகர் கச்யபராக ஆனதுபோலும் வசி (அழகானவன்) எனும் சொல் சிவ என்று மாறியது எனுங்கூறுவர். முதல் நாம ஜகத்காரணவஸ்து பரமசிவன். எனக்குறிக்கின்றது. இது ச்ருதிப்ரஸித்தநாம.

## 2. ஓம் மஹேச்வராய நம:

## २. ओं महेश्वराय नमः

(மஹேச்வரீ ஸ்ரீலலிதாஸஹஸ்ர நாம. 750)

மஹத்துவமுள்ள ஈச்வரன். (இந்திராதிகளுக்கும் ஈச்வரன்) மஹத்தான அடக்கி ஆளும்சக்தி உள்ளவர். இதுவும் வேதப்ரஸித்தமான நாம. "மாயையை ப்ரக்ருதி என்றும் மாயையை அடக்கி ஆள்பவன் மஹேச்வரன்" எனவும் ச்ருதியில் கூறப்படுகிறது. "ஈச ஐச்வர்யே" என்ற தாதுவிலிருந்து தோன்றிய சப்தமிது. மஹத்தான ஈச்வரன் மஹான்களுக்கும் ஈச்வரன் என இருவகையாகவும் அர்த்தம்பொருந்தும். ஐச்வர்யம்வாய்ந்த அனைவரையும் ஈச்வரன் அல்லது ஈசன் என்றாலும் இச்சொல் பரமசிவத்திற்கே உரியதாகும். கிரீசன் தனேசன் என மற்ற அடிமொழிகளைக் கூறாமல் ஈசன் என்பது பரப்ருஹ்மமானபரம சிவத்தையே கூறுவதாகும். அதனால்தான் பத்து உபநிஷத்துக்களில் முதலாவதாகக்கருதப்படும் உபநிஷத்திற்கு ஈசாவாஸ்யமென்று பெயர் தோன்றிற்று. அது ஈசனெனும் பரமாத்மாவையே கூறுகிறது.

"எவன் வேதத்தின் ஆதியில் ஸ்வரமாகச் சொல்லப்படுகிறானோ எவன் வேதாந்தத்தில் ப்ரதிஷ்டிதனோ, ப்ரக்ருதி லீனனான அந்த ப்ரணவாகாரனுக்கு மேற்பட்டவன் (நாதவடிவ) மஹேச்வரன்" என்றும் ச்ருதி கூறுகிறது. (தைத்திரீயாரண்யகம்)

"சிவோ மஹேச்வரச்சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ: ஸம்ஸார வைத்ய: ஸர்வக்ஞ: பரமாத்மேதி முக்யத:" என இவ்வெட்டுநாமாக்கள் மிக முக்யமானதெனச் சிவபுராணங் கூறுகிறது.

மஹேச்வரரின் ஆயிரத்தின் ஓரம்சத்தால் ருத்ரனும் கோடியின் ஓரம்சத்தால் ப்ருஹ்ம விஷ்ணுக்களும் உண்டாகின்றனர்.

மஹேச்வர தத்வம் மூன்று வ்யூஹமாகப் பிரிக்கப் பட்டுள்ளது. 1. பரமசிவம். 2. ஸதாசிவன். 3. மஹேச்வரன். சிவஸாதாக்யம், அமூர்த்த ஸாதாக்யம், மூர்த்த ஸாதாக்யம், கர்த்ருஸாதாக்யம், கர்மஸாதாக்யம். என இரண்டாவதான ஸதாசிவம் ஐந்துவகையாம். சந்த்ர சேகரன் முதலிய இருபத்தைந்து பிரிவுள்ளது மஹேச்வர தத்வம். ஆக மூன்றும் சேர்ந்து பரமசிவ தத்வம் முப்பத்தொன்ருகும். தேவேந்திரன் ரகுவை நோக்கி "புருஷோத்தமனெனும் சொல் எப்படி ஹரியையே குறிக்குமோ மஹேச்வரனென்றசொல் எப்படி முக்கண்ணனையே குறிக்குமோ, அங்ஙனம் சதமகன் என்று என்னையே முனிவர் அறிவார்கள். இச்சொல் இரண்டாவது மனிதனிடம் செல்லாதென்கிருர். (ரகுவம்சம்)

அன்றியும் மஹாகவி காளிதாசன் விக்ரமோர்வசீய மெனும் நாடகமங்கள சுலோகத்தில் ஈச்வரன் என்றசொல் வேறு ஒருவரையும் கூருமல் அர்த்தம் பொருந்தியதாக எவனிடத்தில் அமைந்திருக்கிறதோ அந்தபகவான் நன்மை செய்யட்டுமென, ஈச்வரபதத்திற்குப் பரமசிவமே பொருளென உணர்த்துகிருர். முதல்நாம ஜகத்காரணன் என்றும் இரண்டாவது நாம கார்ய வஸ்துவாகவும் ஆன வன் எனவும் விளக்குகிறது. காரணமே கார்யமாவது இயல்பு.

## 3. ஓம் சம்பவே நம:

## ३ ओं शम्भवे नमः

(சாம்பவீ ஸ்ரீ ல. ஸ. 122.)

ஸுகத்தை உண்டுபண்ணுபவர். ஆநந்தமுள்ளவர். அநாதியான ஸம்ஸாரத்தில் பல பிறவிகளில் சுழன்று சொல்லொணத் துன்பங்களை அனுபவிக்கும் ஜீவராசிகளுக்குச்சிறிது காலம் உபஸம்ஹார மூலமாக ஸுகமளிப்பவர். வைத்தியர் ரணசிகித்ஸை செய்வதுபோல் உபஸம்ஹாரமும் கருணையால் செய்யப்படுவதால் ஹிம்ஸையர

கிறது. இதுவும் ச்ருதி பிரஸித்தநாம. சம்என்பது ஸுகம் எனும் பொருள்கொண்ட அவ்யயம். அது இவரிடமிருந்து உண்டாவதால் சம்பு என்ற சொல் தோன்றிற்று "சிவ ஏகோத்யேய: சிவங்கர:" இவன் ஒருவனே த்யாநம் செய்யத் தக்கவன் எனச்ருதி கூறுகிறது. இந்நாம உபஸம் ஹாரமூர்த்தியாக த்யாநம் செய்யும்படி கூறப்படுகிறது. ஸ்ருஷ்டிலய மிரண்டு மடுத்துக்கூறப் பட்டதால் இடையி லுள்ள பாலநமும் அதைச் செய்யும் த்ரிமூர்த்தி இவரே என எண்பிக்கின்றது.

# 4. ஓம் பிநாகிநே நம.

## ४. ओं पिनाकिने नमः

பிநாகமெனும் வில்லை உடையவர். பி-சாக்ரியால் மூடப்பட்ட, நாக-திருபுரனால் ஆக்ரமிக்கப்பட்ட ஸ்வர்க் க்த்தை உடையது என்பது பதத்தின் பொருள். ஸ்கந் தனால் கொல்லப்பட்ட தாரகாஸுரனது புத்திரர்களான வித்யுன்மாலி, மகராக்ஷன், கமலாக்ஷன், என்ற மூன்று அஸுரர்களும் பிரம்மனை நாடித் தவம்செய்து மூன்று வரங்களைப் பெற்றுத் தேவர்களை ஹிம்ஸித்தனர். ஸுரர்களது பிரார்த்தனைக்கிணங்கி அபூர்வமான தேரின் மீதமர்ந்து கடாக்ஷத்தால் முப்புரத்தையும் சிவன் எரித் தார். அம்புவடிவமாயுள்ள ஸோமன் விஷ்ணு கர்லாக்நி வாயு ஆகிய இவர்கள் தங்களை அஸுரர்மீது விடும் படிவேண்ட இந்த வில்லின் மூலம்வர்களைவிட்டார். (லிங்க புராணம்) பிநாகமெனும்வில்லை ஊன்றிய இடத்திலிருந்து பிநாகினீ என்று நதி தோன்றி உத்திரபிநாகினீ தக்ஷிண பிநாகினீ என இரண்டாகமாறிற்று.

கண்வமுனி கடுந்தவம் புரிய அவர்மீது புற்றுத் தோன்றி அதில் ஓர் மூங்கில்மரம் உண்டானது. அதி லிருந்து பிநாகம், சார்ங்கம், காண்டீவம் என மூன்று வில்கள் செய்யப்பட்டன.

ஜகத்தைக்காக்கு மிவ்விவ் வேதத்தில் பல இடங்களில் போற்றப்படுகிறது. (பாரதம் ஆநுசாஸனிகபர்வா) இந்நாமாவும் வேதப்பிரஸித்தமானதே. அபி. எனும் தாதுவிற்கு மூடுதல் என்பது பொருள். பாணத்தால் மூடப்பட்ட ஸ்வர்க்கத்தை உடையவரென்பது ஸமாஸார்த்தம். தன் கடாக்ஷத்தினுல் அல்லது அட்டஹாஸத்தால் ஸ்வர்க்கத்தில் கூடிய திருபுரத்தை எரித்தார். ஆனுலும், பாணவடிவமான மஹாவிஷ்ணு முதலியவர்களது பிரார்த்தனைக்கிணங்கி பக்த பராதீனனுன பகவான் மறுபடியும் எரிந்த முப்புரத்தின்மீது அந்த பாணத்தை விட்டார். இந்த ஐதிஹ்யமே சிவாலயதீபம் எனும் கார்த்திகையில் ஆலயங்களில் "சொக்கப்பானை" என ஓலைகளாலாகிய மூன்று குடிசைகள் எறிக்கப்படுகின்றன. இந்நாம பரிபாலன கர்த்தாவான விஷ்ணுவாகவும் இவர் த்யானம் செய்யத் தக்கவரென எண்பிக்கிறது. இதுவரை "ஜன்மாத்யஸ்யயதஃ" என்ற வேதாந்த ஸூத்ரத்தின் பொருளுரைக்கப்பட்டது.

## 5. ஓம் சசிசேகரராய நம:

## ५. ओं शशि शेखराय नमः

(சாருசந்த்ர கலாதரா ஸ்ரீலஸ 243.)

சந்திரனைச் சிரோபூஷணமாக உடையவர். "சிவன் தலைமீதுள்ளஜடை மலைகளும் நதிகளுமாகும். சந்திரன் ஞானவடிவனுவான்" (வராஹபுராணம்) ஜீவர்களுக்கு மூர்த்தம் அமூர்த்தமென இரு சரீரமுண்டு. அதில் அமூர்த்தமென்பது க்ஷேத்ரஜ்ஞன். மூர்த்தமென்பது பாற்கடலில் தோன்றிய ஸர்வஜீவ ஸமஷ்டி ரூப சந்திரன். (வராஹபுராணம்) அதைச் சிரஸில் வஹிக்கக் காரணம் யாதெனில் தக்ஷயாகத்தில் சிவனுல் காலால் உதைக்கப்பட்ட சந்த்ரன், தான் நிரபராதி, தன்னை க்ஷமிக்க வேண்டும் என வேண்ட கருணு மூர்த்தியான பகவான் அவனைத்தலைமீதணிந்தார். (பார. ஆநு. பர்வா.) புராண ஆகம ப்ரஸித்தநாம இது

மஹேச்வரனது இருபத்துஐந்து மூர்த்திகளில் இது முதல் மூர்த்தியாம்.

முயல்போன்ற அடையாளமுள்ளதால் சசீ எனச் சந்திரனுக்குப்பெயர். சந்திரனைச் சிரோபூஷணமாக உடையவர் என்பதுபொருள். இம்மூர்த்தியே சந்திர சேகரர் என்றும் சந்த்ரமௌளீச்வரர் என்று மழைக்கப் படுகிறது. ஆலயங்களில் உத்ஸவகாலத்தில் பெரும்பாலும் கிராமப்பிரதக்ஷிணம்வரும் மூர்த்தி இது. “குணதோஷங் களிரண்டுமில்லாத விடமில்லை. அறிவாளி குணத்தைக் கொண்டாடித் தோஷத்தை மறைத்து வைத்திருக்க வேண்டும். பாற்கடலிலிருந்து தோன்றிய விஷத்தைப்பரம சிவன் தன்கழுத்திலே வைத்துக்கொண்டார். சந்திரனைத் தலைமீது வைத்துக் கொண்டாடுகிறார் பார்” என ஓர்கவி கூறியிருக்கிறார். இவர்பரமதயாளு. சந்திரனைப்போல் பக்த கர்களை ஸந்தோஷப்படுத்து கிறவர் என இந்நாம எண்பிக் கின்றது. பிநாகி என்ற நாமாமுதல் ஸகுண மூர்த்தி ஸ்வ ரூபம் கூறப்படுகிறது.

## 6. ஓம் வாமதேவாய நம:

## ६. ओं वाम देवाय नमः

அழகானதேவன். இடதுபுரமுள்ள உமையுடன் கிரீடைசெய்பவர்.

“தனது உடலில் ஓர் பாகத்திலுள்ள சக்தியைக் கொண்டே உலகஸ்ருஷ்டி முதலிய கிரீடை செய்கிறார்” என்பதனால் அவர் அபரிமிதமானமஹிமைக்கு இருப்பிட மானவர் எனத்தெரிகிறது. மங்களத்திற்கு இருப்பிட மாகவும் யுவாவாகவும் அதி ஸுந்தரனாகவும் கல்பவிரு க்ஷத்தினடியே உமையுடன் ஸுகமாகவீற்றிருப்பவராகவும் சிவனைத்யாநம் செய்யவேண்டும். (ஆகமம்) இவர் உதாஸீ நன். இடது புறமுள்ள ஜகன் மாதாவின் அருளால்தான் இவர் உலகஸ்ருஷ்டி முதலியதைச் செய்கிறார். தேவியில்லா

விடில் அசையாமலிருப்பர். (ஸௌந்தரியலஹரீ) உலகவில க்ஷணமாகக்கபாலம் முதலியவைகளைத் தரிப்பவர், என்றும் பொருள் கூறலாம். வேறொருவரிடமிருந்து, நற்பயனை விரும்புபவரன்றோ மங்களவேஷம் தரிக்கவேண்டும்? ஸ்வதந்திரனாகவும் ஏகனாகவும் உள்ளவன், எப்படியிருந்தா லென்ன? (சிவதத்வரஹஸ்யம்).

இதுச்ருதிபிரஸித்த நாம. ஸதாசிவவ்யூஹம் ஐந்தில் வடதிசையிலுள்ள மூர்த்தியிது.

## 7. ஓம் விரூபாக்ஷாய நம:

## ७. ओं विरूपाक्षाय नम:

விலக்ஷணமான கண்களுள்ளவன். உலகிற்கு விருத்த மான நெற்றிக்கண் மாத்திரமல்ல. ஸகல இந்திரியங்களும் தாதுக்களும் கூடலோகவிலக்ஷண மானவைகளே! இவர் உடலில் ரக்தமாம்ஸ எலும்புகளில்லை. ஆகாசத்தில் பிரதி பிம்பம்போல் இந்திரதநுஸ் போல் ஜ்யோதிர்மயமாக விளங்குவது ஸதாசிவனது சரீரம். (சிவாகமம்) இதுவும் ச்ருதி பிரஸித்தி நாம. “சாஸ்திர யோநித்வாத்” என்ற பிரும்மஸூத்திரத்தில் கூறியபடி இவர்ஸகல ஆகமங்களுக் கும் மந்திரங்களுக்கும் இருப்பிட மாயிருக்கிறார்” ‘எனகா மிகாகமத்தில் வர்ணிக்கப்படுகிறது” சந்திரஸூர்ய அக்நி களையே மூன்று கண்களாக உடையவர் என, (48) வது நாமா கூறுகிறது. இங்கு “இச்சாசக்தி ஜ்ஞாந சக்தி கிரியாசக்திகளே மூன்றுகண்களாக இருக்கின்றன” எனச்சிவபுராணங் கூறும் அர்த்தம் மிகப்பொருத்தமாம். அன்றியும் நெற்றியிலுள்ள கண்ணே நெருப்பாம். அதே மன்மதனை எரித்தது. ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வ கர்மங்களையும் எரிக்கிறதென்று ஸ்ரீபகவத்கீதை கூறுகிறது. கர்மங்களுக் கெல்லாம், காமமே முதற்காரணம். காமனை எரித்தது, கர்மபீஜத்தை எரித்த ஜ்ஞாநச்சுடராகும். ஆதலின் இந் நாம கர்மநாசத்துடன் ஞாநத்தை விரும்புவோரால் த்யா நத்துடன் ஜபிக்கத்தக்கதென ஸூசனை செய்கிறது.”

## 8. ஓம் கபர்திநே நம:

### (८) ओं कपर्दिने नमः

(கபர்தினீ ஸ்ரீ ல. ஸ. 793.)

கங்காப்ரவாஹமுள்ள ஜடாமண்டல முடையவர். ஜடைமீதுபட்டதால் கங்கை அதிக பாவனமானது. அந்த கங்கை கோரமான கலியின் பாபத்தை அகற்றவல்லது கபர்தியின் த்யாநமும் நமஸ்காரமும் அங்ஙனமே. [கூர்ம புராணம்) இதுவும் சுருதிபிரஸித்த நாம.

"பர்வ பூர்த்தௌ" என்ற தாதுவிலிருந்து பிரவாஹம் என்ற அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய "ப" எனும் சப்தம் தோன்றிற்று "க" என்பது ஜலமெனும் அர்த்தங்கொண்ட சொல் "கப" எனில் ஜலப்ரவாஹமென்று பொருள். அது கங்காபிரவாஹமாம் அதை. "தாயதி" சுத்தம் செய்கிறது என்று கபர்த்தசப்தத்தின் அர்த்தம். கங்காஜலத்தைச் சுத்தம் செய்யும் ஜடையை உள்ளவர் என்பது பதார்த்தம். "புண்ணியமான சிவன் தலைமீது புண்யமான கங்கை விழுந்து. சிவனங்கத்தில்பட்ட ஜலம் பவித்ரமென மஹர்ஷிகளதில் ஸ்நாநம் செய்தார்கள்" என ஸ்ரீமத் ராமாயணம் கூறுகிறது. "அபவித்ரனாயினும் பவித்ரனாயினும் ஸர்வ அவஸ்தைகளை அடைந்தவனாயினும் எவன் தேவனான ஈசானனை நினைக்கின்றானோ அவன் உள்ளும் புறமும் சுத்தனாவான்." எனச்சிவதர்மோத்தரம் கூறுகிறது. தானே சுத்தனானவன் கங்கையையு மதிசுத்தமாக்கித் தரிப்பவன். அத்தகையவனை த்யாநம் செய்தால் நமது மலங்கள் அகலும் என இந்நாம விளக்குகிறது.

## 9. ஓம் நீலலோஹிதாய நம:

### (९) ओं नील लोहिताय नमः

சிவப்பாயிருந்து கறுப்பானவர். முன்கல்பத்தில் பிரும்மா தனக்குச் சிவன் புதல்வனாய்ப் பிறக்கவேண்டுமென்று அக்கினியில் ஹோமம் செய்தார், அவரது நெற்றி

வியர்வை அக்நியில் விழுந்து சிவப்பாகி மறுபடியு
அதுகறுத்தது. அதிலிருந்து பரமசிவன் தோன்ற
ுர். லோஹித நீல என்பதற்கு பதில் " நீலலோஹித
என்று ச்ருதி மாற்றிக்கூறியது. (சிவபுராணம்) கழு
தில் கறுத்தவர். உடலில் சிவத்தவர் என்றும், இட
புறம் கறுத்தவர் வலதுபுறம் சிவத்தவர் என்று
வேறு பொருளும் உண்டு. இதுவும் ச்ருதி ப்ரஸித்தநா
கறுப்பு நிறம்தேவி, சிவப்பு நிறம் தேவன். விஷத்தை
கழுத்திலடக்கியதால் கழுத்துக்கறுப்பு, உடல் சுவர்
வர்ணமானது என்றும் கூறலாம். இத்தகையமூர்த்தி சூர்
மண்டலத்திலிருப்பதாக உபநிஷத் கூறுகிறது. "எந்த இ
தகைய சூரியனுக்குள்ளே ஹிரண்மயமான புருஷன்காண
படுகிறானோ அவன் ஹிரண்மயமான தாடிமீசை கேச
உள்ளவன். நகம் முதல் எல்லாம் ஸ்வர்ணமயமானவன்.

## 10. ஓம் சங்கராய நம:

### १०. ओं शङ्कराय नमः

(சாங்கரீ. ஸ்ரீல. ஸ. 126.)

மங்களத்தைச்செய்பவர். இதுவும் சுருதி பிரஸித்
நாம. சம்பு என்ற மூன்றுவது நாமாவுமிதுவும் ஓரேமாதி
பொருளுள்ளவை.

## 11. ஓம் சூல்பாணயே நம:

### ११. ओं शूलपाणये नमः

சூலத்தைக்கையிலேந்தியவர். சூலம் எனும் ஆயுத
யஜ்ஞவடிவனான விஷ்ணுவினால் முக்குணங்களாலு
மூன்று சக்திகளாலும் மனதினால் படைக்கப்பட்டது
(பாத்மபுராணம்) மூன்று குணமே சூலம். ஸத்யநிஷ்டையே
பரமசிவனது பரசு. (கோடாரி) (சிவாகமம்)

இதுவும் ச்ருதி ப்ரஸித்த நாம. சங்கசூடவதத்திற்
காக விஷ்ணு சிவனுக்குச் சூலம் தந்ததாகத் தேவீபாகவ

மும் ஜாலந்தரவதத்திற்காக விஷ்ணுவுக்குச் சிவன்சக்ரம் ந்ததாகச் சிவபுராணமும் கூறுவது, ஹரிஹராத்பேதத் தைக் காட்டுவதாம்.

சூலத்தைக்கையிலேந்தி இருப்பது பக்தர்களுடைய த்ருவை உடனே சிக்ஷிப்பவர், என்றும் மூன்று குணவடி வமான மாயையை அடக்கி ஸ்வாதீனமாகச் செய்தவர், என்றும் எண்பிக்கின்றது.

## 12. ஓம் கட்வாங்கினே நம :

## १२. ओं खट्वाङ्गिने नमः

கட்டில் காலே ஆயுதமாக உள்ளவர். "சிவந்தஜடை, த்துகைகள், அபயம், வரம், சக்தி, சூலம், கட்டில்கால்" இவைகளைவலது கைகளால் தரிப்பவர், பாம்பு, ஜபமாலை, டுக்கை, கறுந்தாமரை, மாதுளம்பழம், இவைகளை இடது கைகளால் தரிப்பவர் சிவன். இச்சா ஜ்ஞான க்ரியா சக்தி களே திரிசூலம். சுத்த ஸத்வத்தை விருத்தி செய்யும்போது இவைகளே கட்டில் காலாக ஆகின்றன. (காமிக ஆகமம்) பிரும்மாவின் சிரஸைக் கிள்ளியதால் உண்டான பிரும்ம ஹத்தி தோஷம் நிவர்த்தியாவதற்காக தர்மநூல் கூறிய ண்ணம், கபாலம் கட்டில்கால் இவைகளைத் தரித்துக் கொண்டு பன்னிரண்டாண்டு ப்ராயச்சித்தம் செய்தார். னப் பொருள் கொள்ளலாம். பிரம்மனைக் கொல்லா ல் தலையைக்கிள்ளியது பிரும்மஹத்தியாகுமா? பரமசிவத் ற்கும் இப்பாவம் தோன்றுமா? எனில், தான் இங்ஙனம் சய்தால், எவரும் பிரும்மத்ரோஹம் செய்யாமலிருப்பர் ன்று அவர் விருதம் செய்தார். (ப்ரம்மாண்ட புராணம்) து புராணப்ரஸித்தமான நாம. பிரம்ம சிரஸைச் சேதித் து திருக்கண்டியூர் க்ஷேத்திரமென ஐதிஹ்யம்.

சூலபாணி என்ற நாம, மாயையையும் அதன் குணங் ளையும் கார்யத்தையும்கடந்தவன் எனக்கூறுகிறது. இங்கு

பிராயச்சித்தத்திற்காக கட்டில்கால் போன்ற ஆயு தத்தை ஏந்தி கர்மாசெய்கிறவன் என்பது முன்பின் விரோ தம்போல் தோன்றும். ஆனால் ருணநீதனாயினும் உலக சிக்ஷைக்காக அதைச் செய்கிறார். இது உலகத்திடம் இவருக்குள்ள கருணையைக் காட்டுகிறது. என்பதால் சங் கைக்கு இடமில்லை.

## 13. ஓம் விஷ்ணுவல்லபாய நம:

## (१३) ओं विष्णु वल्लभाय नमः

விஷ்ணுவினிடம் பிரியமானவர். கிருஷ்ணன் முக்கா ணங்களாலுமென்னை ஆராதிப்பதால் அவர் எனக்கு மிகப் பிரியமானவர் என சிவனேகூறுகிறார். (பாரதம்) உமாஸஹாயம் பரமேச்வரம் என்ற வேதவாக்கியத்தில் அவனே விஷ்ணு அவனே பிராணன் எனக் காணப்படு வதால் எவ்வளவு விஷ்ணுவிடம் இவருக்குப் பிரியமுளது என்பது ஸ்பஷ்டமாகிறது. பல சிவ க்ஷேத்திரங்களில் விஷ்ணுமூர்த்தியும் சில விஷ்ணு ஆலயங்களில் சிவலிங் மும் காணப்படுவது விஷ்ணுவல்லபர் என்பதை வலி யுறுத்துகிறது.

பரமசிவன் தனது காலால் ஜலத்தில் சக்ரத்தைப் படைத்து ஜாலந்தராஸுரனைக் கொல்ல அதை விஷ்ணு விற்களித்தும், தனது உடலில் பாதி அவருக்களித்துச் சங் கர நாராயணன் எனப் பெயர்பெற்றதும் தன்னை அர்ச்சிப்ப தற்காக விஷ்ணு சேகரித்த ஆயிரம் தாமரையில் ஒன்றை மறைத்துத் தன் கண்ணால் அவர் அர்ச்சித்தபோது புண்ட ரீகாக்ஷன் என விஷ்ணுவிற்குப் பெயரிட்டதும் புராணங் களில் ப்ரஸித்தமானவை. சக்ரமளித்தமூர்த்தி பத்தொன் பதாவது. சங்கரநாராயணமூர்த்தி பதின்மூன்றுவது மூர்த்தி. (வாதுல சுத்தம்) இம்மூன்று ஐதிஹ்யங்களும் மூன்று க்ஷேத்ரங்களில் காணப்படுகின்றன. 1. சங்கரன்கோயில் 2. திருமாற்பேறு 3. காஞ்சிமண்டலம்,

## 14. ஓம் சிபிவிஷ்டாய நம:

## (१४) ओं शिपि विष्टाय नमः

பிராணிகளிடம் யஜமானனுக வீற்றிருப்பவர். பசுக் கள் "சிபி" எனவேதங் கூறுகிறது. அவைகளுடைய ஹிருதயத்தில் பதியாக நுழைந்திருப்பதால் சிபி விஷ் டர்=பசுபதி எனப்படுகிறுர் இதுவும் சுருதி ப்ரஸித்த நாம.

"உலகைப்படைத்து அதில்நுழைந்தான்." என் றும் "இருகாலுள்ளவர்களுக்கும் நாலுகாலுள்ளவைகளுக் கும் இவர் பதி" யென்றும், "ஓபசுபதியே இந்தபசுவைப் பசுபதியான உம்பொருட்டு யூபத்தில் (யாகத்தில் நடப்ப டும் யூபஸ்தம்பம் ஆலயத்திலுள்ள த்வஜஸ்தம்பம்போன்ற தாம்) கட்டுகிறேன்." என்றும் பல சுருதிகள் சிவனே பசுபதி என விளக்குகின்றன.

பசுபதி கோவில் என்பது பிரஸித்தக்ஷேத்ரம்.

## 15. ஓம் அம்பிகாநாதாய நம:

## १५. ओं अम्बिका नाथाय नमः

அம்பிகையின் பதி. இது அர்த்தத்தால் சுருதி பிர ஸித்தநாம. 25 மூர்த்திகளில் விவாஹமூர்த்தி ஐந்தாவது. அம்பிகாபதி எனக்கூருது அம்பிகாநாதன் என்பதால் அம் பிகையால் வேண்டப்பட்டு அவளது பக்திக்கிசைந்தே மணந்தார் என்றும் பாஹ்யமான வஸ்துக்களால் ஸந் தோஷமவருக்கில்லை, தன்னுலேயே தான் ஸந்தோஷப்படுவர் என்று மர்த்தமாகிறது. அப்படியிருந்தும் இவர் தனது விவாஹத்தைப்பார்த்தும் கேட்டும் படித்தும் பக்தர் இன்ப மடையட்டு மென்பதற்காகவே அம்பிகாநாதரானுர். அர்ச் சாவதாரமான ஆலயங்களில் ஆண்டுதோறும் பார்வதீவிவா ஹம் நடப்பதும் லோகக்ஷேமத்தின் பொருட்டேயாம். இவ் விவாஹ வைபவத்தைத் தன்க்குக் காட்டியருள

வேண்டுமென அகஸ்தியர் வேண்ட அகஸ்யம்பள்ளி க்ஷேத்திரத்திலே சிவன் அவருக்கு விவாஹக் காட்சியளிப்பதாக ஐதிஹ்யம்.

## 16. ஓம் ஸ்ரீகண்டாய நம:

## १६. ओं श्रीकण्ठाय नमः

விஷத்தாலழகிய கழுத்துள்ளவர். இக்கதை மிகப் பிரஸித்தமானது. "உத்தமனை அண்டிய விஷமும் தனது தீயகுணத்தைவிட்டு அழகையளித்தது. எவராலும் முடியாத காரியத்தைச் செய்பவர் இவர் என்பது கருத்து. (சிவ தத்வ ரஹஸ்யம்) விஷமுண்ட மூர்த்தி பதினெட்டாவது. நஞ்சுண்டராலயம் மைசூரில் உளது. திருப்பாலைத்துறையிலுமிந்த ஐதிஹ்யமுண்டு.

ஸ்ரீயெனும் காலகோட விஷமானது மாவிஷ்ணுவின் திருமேனியைக் கறுப்பாக்கியது.

அதைச் சிவன் உண்டதினத்தில் அவர் வயிறுகின்ற அண்டத்திலுள்ளோர், அன்று உணவு உட்கொள்ளாமல் இரவு உறங்காமல் கண்விழித்தனர். ஆதலின் அத்தினம் ஏகாதசி என்றும் இந்த நியமங்களை அன்று அநுஷ்டித்தல் வேண்டுமென்றும் சிவ புராணங் கூறுகிறது. விஷந்தீண்டியவர் உண்ணவும் உறங்கவும் கூடாதென வைத்ய நூல் கூறுகிறது.

## 17. ஓம் பக்தவத்ஸலாய நம:

## १७. ओं भक्त वत्सलाय नमः

பக்தரிடம் அன்புள்ளவர். "என்னை அடைவதைவிடப் பக்தருக்கு வேறு லாபமில்லை. பக்தரைப் பெறுவதைத் தவிர எனக்கு வேறு லாபமில்லை" (சிவபுராணம்) தென்னாட்டில் யஜ்ஞதத்தன் என்றோர் பிராமணரிருந்தார். அவர் நித்யகர்மா தவறாதவர். அவருக்கு விசார சர்மன் என்றோர் புத்திரன் பிறந்தான். அவன் பிறவியிலேயே விவேகியாகத் தோன்றி சிவ பக்தியிலீடுபட்டான்.

ஒருநாள் இடையனொருவன் பசுவைக் கொம்பாலடித்தது கண்டு மநங்கரைந்து பசுவின் பெருமையை அவனுக்குபதேசித்தார். மறுபடியுமவன் பசுவை ஹிம்ஸிக்க, ஊரிலுள்ள பசுக்களனைத்தையும் தானே மேய்த்துவந்தார். இவரது அன்பினால் பரவசமாகிய பசுக்கள் முன்னிலும் பன்மடங்கு பாலைச்சுரந்தன. விசாரசர்மன், தன்னருகே வந்து ஒவ்வோர் பசுவும் தன்னிடம் நன்றி செலுத்துவதுபோல் பாலைக் கீழே சொரிவதைக்கண்டு ஆரண்யத்தில் மணலினால் ஓர் லிங்கம் செய்து அதற்கு இப்பாலால் அபிஷேகஞ் செய்துவந்தான்.

இந்தப்பாலும் தனக்குக்கிடைத்தால் லாபந்தானே என்று கருதிய ஒருவர் ஊராரிடமிதைக் கூறினர். அவர்கள் யஜ்ஞதத்தனை அழைத்து உன்மகன் எங்கள்பாலை வீணாக மணலில் கொட்டுகிறானென்றனர். ஒருநாள் யக்ஜ்ஞதத்தன் மறைந்திருந்து பார்த்தார். ஒவ்வோர் பசுவும்குடம் பால் தருவதையும் புத்திரனதைச் சிவலிங்கத்தின்மீது கொட்டுவதையுங் கண்டு சினங் கொண்டார். புத்திரன் முதுகில் பிரம்பாலடித்தார். அவன் அதைக் கவனியாது பூஜைசெய்ய அவனெதிரிலுள்ள பால்குடத்தைக் காலால் உதைத்தார். சிவாபராதம்பெரிது. அதைச்செய்தவர் எவராயினும் சிக்ஷிக்கலாமென்று தீர்மானித்து, அவர் பிராமணன், குரு, தந்தை, என்றுங்கூட கவனியாமல் அவர் கால்களை வெட்டினார். இதைக்கண்டு வியந்த பரமசிவம் உமையுடன் ப்ரத்யக்ஷமாகி சிவ நிர்மால்யத்திற்கென ஏற்பட்ட சண்டிகேச பதவியை அவருக்களித்தார். அவர் மஹிமையால் அவர் பிதாவும் நற்கதிபெற்றார். சிவாலயப் பிரதக்ஷிணம் முடிந்தபின் சிவாபிஷேக ஜலம்வரும் ஸோமஸூத்திரத்திற்கெதிரில் வீற்றிருக்கும் சண்டிகேசரிடம் வந்து “நீலகண்டரின் பாதாரவிந்தத்தில், ஸதா அமைந்துள்ள மநம்,வாய்ந்த சண்டிகேசரே! உமக்கு நமஸ்காரம், சிவ ஸேவைக்குப் பலம்தாரும்.” என மெதுவாக அவர் நிஷ்டை கலையாமல் இருகரங்களால் சப்தம் செய்யவேண்டு

மென்பது ஆகம விதியாகும். இச்சரிதம் பகவானுக்குப் பக்தனிடமுள்ள அன்பைக்காட்டுகிறது.

## 18. ஓம் பவாய நம:

## १८. ओं भवाय नमः

(பவாநீ ஸ்ரீலலி-ஸ-112)

ஸத்தா வடிவமாக உள்ள ஜலாதிஷ்டானமூர்த்தி. எல்லா வஸ்துக்களிலும் "இருக்கிறது" என்ற வியவஹாரத்திற்கு ஆதாரமாயுள்ளது. எட்டு மூர்த்திகளில் "பவ" என்பது ஸர்வாதாரமான ஜலமூர்த்தி இதுமிகச்சிறந்த மூர்த்தி ஆதலால் ஆபஸ்தம்பாதி ஸூத்ரகாரர்களும் சைவாதி புராணங்களும் காமிகாதி ஆகமங்களும் ஈசாநாதி பலிகளிலும் நித்யார்ச்சனையிலும் இப்மூர்த்தியையே முதலில் கூறினர். இதுவும் சுருதிப்பிரஸித்தநாம. "பூபவ" என்ற தாதுவிலிருந்து உண்டான சொல்லிது. "பவ எனும் மூர்த்தி, அஷ்ட மூர்த்தி எனக்கூறப்படும் எட்டு மூர்த்திகளுக்கும் ஸமஷ்ட்யபிமாந தேவதை என லிங்கபுராணம் வர்ணிக்கிறது.

## 19. ஓம் சர்வாய நம:

## १९. ओं शर्वाय नमः

(ஸர்வாணி ஸ்ரீலஸ. 121)

ஸம்ஹாரம் செய்யும் பிருதிவ்யதிஷ்டாந மூர்த்தி. பவ, சர்வ, ஈசாந, உக்ர, ருத்ர, பீம, பசுபதி, மஹ, என அஷ்ட மூர்த்திகள் பூமி முதலியவைகளுக்கு அதிஷ்டாதாவாக உள்ளவர் என்பதுபொருள். (83) வது நாமாவில் அஷ்ட மூர்த்தியின் பொருள் காண்க) இதுவும் ச்ருதி பிரஸித்த நாம.

ச்ரு எனும் தாதுவிலிருந்து அந்த்யகாலத்தில் ஸ்கல ஜகத்தையும் தனக்குள் ஒடுக்கிக்கொள்கிறார், என்ற பொருளுடன் தோன்றிய பதமிது.

## ஓம் திரிலோகேசாய நம:

### २०. त्रिलोकेशाय नमः

(த்ரிபுரேசி. ஸ்ரீலஸ. 788)

மூவுலகிற்கும் ஈசன். ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹார வடிவமான கார்யத்தைச் செய்பவர். "பகவான் மறுபடியும் யோசித்து, ஒவ்வோர் காரியத்திற்கும் ஒவ்வொருவரைத் தலைவருக நியமித்தார். மூவ்வுலகிற்குப் தேவர்களுக்கும் இந்திரனைத் தலைவனுக்கினுர். (பாரதசாந்திபர்வ) சிவனைத் திரிலோகேசன் என்பது ஔபசாரிகமாம். ஸர்வலோகேசனை மூவ்வுலகிற்கு ஈசன் என்பது கோஸலாதிபதியை அயோத்யாதிபதி என்பதுபோலாம். இந்திரனுயிருப்பதுமிவரே. இந்த்ரா ந்தர்யாமி என்பது கருத்து.

## 21. ஓம் சிதிகண்டாய நம:

### २१. ओं शितिकण्ठाय नमः

(காலகண்ட ஸ்ரீ. ல. ஸ. 464)

கறுத்தகழுத்துள்ளவர். "ஒரு கல்பத்தில் இந்திரன் வஜ்ரத்தால் சிவனை அடிக்க தானளித்த வஜ்ரம் அமோகமானதெனக் காட்ட, தன் கழுத்தில் கறுப்பு நிறத்தைச் சிவன் ஏற்ருர்." (ஹரிவம்சம்) இதுவும் ச்ருதிபிரஸித்த நாமம்.

ஸ்ரீகண்ட என்ற பதம் ஹாலாஹல விஷமுண்டதைக் கூறுகிறது. சிவனது கழுத்து கறுப்பானதற்கு இரண்டு காரணங்கள் உண்டெனக் காட்டவே ச்ருதி ஓரே இடத்தில் "நமோ நீலக்ரீவாயச ஸ்ரீதிகண்டாயச" என இரண்டையும் கூறிற்று. இந்திரனது வஜ்ரம் கறுப்பை மாத்திரம் உண்டு பண்ணிற்று. இவரை வேறென்றும் செய்யவில்லை. ஆதலால் இந்நாம இவரது ஒப்பற்ற பலசாலித் தன்மையையும் பக்த வாத்ஸல்யத்தையும் காட்டுகிறது.

## ஓம் சிவாப்ரியாய நம:

## २२. ओं शिवाप्रियाय नमः

(சிவப்ரியா ஸ்ரீ. ல. ஸ. 409)

சித் சக்தியான சிவையிடம் ப்ரியமுள்ளவர். சிவையை விட்டு ஒரு க்ஷணமும் பிரியாதவர். இதுவும் அர்த்தத்திஞல் ச்ருதிப்பிரஸித்தநாம. உமா ஸஹாய மூர்த்தி இரண்டாவது. "சிவனுக்குத் தேவி ஜ்ஞாநம், கிரியைஇச்சை, பலமளிப்பவள் மநஸ், சாந்தி, தேஜஸ், சரீரம், ஸ்வர்க்கம், திவ்யாஸநம்மஹிஷி, அநுபவிக்கத்தக்க பொருள், ஆகிய எல்லாவடிவமாகவு மிருக்கிருள். தானும் இந்த ஸ்வரூபங்களோடு பரப்பிரம்மத்தின் சக்தியாகவும் ஸர்வ ஆச்சரியங்களுக்கு மிருப்பிடமாகவு மிருக்கிருள்." என ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர்வாள் வர்ணிக்கிருர்கள். இதஞல் இவ்விருவர்களும் சரீர சரீரிகளாகி இணைபிரியாதவர் என்றும், அம்பிகாநாத என்ற நாமாவிற்கும் இதற்கும் வெவ் வேறு பொருளென்றும் தெரிகிறது.

## 23. ஓம் உக்ராய நம.

## २३. ओं उग्राय नमः

உலகில் உயர்ந்தவர். இதுவாயுவின் அதிஷ்டான மூர்த்தி. இதுவும் ச்ருதிபிரஸித்த நாம. "உச ஸமவாயே" அல்லது "உத்" என்பதை முன்னே கொண்ட, கம்கச்ச" தாதுவிலிருந்து பிறந்த சொல்லிது. எல்லாவற்றிற்கும் மேல் மிக உயர்ந்தவர் என்பது அதன் கருத்து. உக்ரன் என்ற சொல் "என்வகுப்பைச் சார்ந்தவர்களுக்குள் யான் உக்ரஞக ஆகவேண்டும். நீ உக்ரனல்லவா" என்ற ச்ருதியால் உயர்ந்தது என்ற அர்த்தமுள்ளதெனத் தெரிகிறது.

## 24. ஓம் கபாலினே நம:

## २४. ओं कपालिने नमः

பிரும்ம கபாலத்தை உடையவர். இது பதிஞைருவது ஆன கங்காள மூர்த்தி. "கல்பாந்தத்தில் முடிகின்ற

கோடிக் கணக்கான ப்ரும்மாக்களின் கபாலமும் பஸ்மாவும் கூர்மத்தின் அங்கமும் வராஹத்தின் கோரைப் பற்களும் மங்கள விக்ரஹனை உமக்கு ஆபரணம். இது உமது ஸர்வோத்கிருஷ்டமான பலத்தை விளக்கவில்லையா?" ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர் ப்ரம்மதர்க் ஸ்தவம்) கபாலி க்ஷேத்திரம் சென்னை மயிலாப்பூர்.

இந்நாம இவரென்று மழியாத ஸ்நாதக வஸ்து என்றும் பிரும்மாதி தேவர்களை விட மிகச் சிறந்த பல முள்ளவர் என்றும் எண்பிக்கின்றது.

## 25, ஓம் காமாரயே நம:

## २५. ओं कामारये नमः

மன்மதனுக்குச் சத்ருவானவர். பரம சிவன் மன்மதனை எரித்த விருத்தாந்தம் ஸகல புராணங்களிலும் பிரஸித்தம். இவரை அடைவதில் உலக ஆசையே சத்ருவாயுளது என்றும் பொருளுண்டு. "பயனை விரும்புபவன் அது கிட்டாவிடில் என்னைப் பஜிக்க மாட்டான். ஆதலால் மோஹதேவி பலோத்தேசத்தோடு என்னை அடைவது முடியாது" (சிவ புராணம்.)

'புத்ராதிகளிடம் அன்பைவிட்டு வைராக்யத்துடன் லிங்கார்ச்சனை செய்பவனுக்கு ஒரே ஜன்மத்தில் பரமபதம் தருகிறேன்.' (கூர்ம புராணம் ஈச்வர கீதை,) இது காமாரி எனும் ஏழாவது மூர்த்தி.

இந்த ஐதிஹ்யம் திருக்குறுக்கை க்ஷேத்ரமாம். (மாயவரம் ஸமீபம்.)

"என் பக்தனிட மன்பு, என்பூஜையை ஆமோதித்தல், என்னை அர்ச்சித்தல், எனக்காக அங்கங்களை அசக்குதல் (அதாவது வேலை செய்தல்) என் கதை கேட்பதில் விருப்பம் ஸ்வரம் அங்கமிவை பக்தியால் மாறுதல், நித்யம் என்னையே ஸ்மரித்தல், ஸதா என்னையே அடுத்து ஜீவித்தல், ஆகிய எட்டுவிதமான பக்தியுள்ளவன், யோகி

யாயினும் போகியாயினும் ஆசையுள்ளவனாயினும் விரக்தனாயினும் காமாதிகளை ஜயித்த ஜ்ஞானியே யாவான்." என சிவதர்மம் கூறுகிறது. ஆதலால் காமத்தை விடாவிடில் சிவனை அடைய முடியாதெனத் தெரிகிறது.

## 26. ஓம் அந்தகா ஸுர ஸூதனாய நம:

## २६. ओं अन्धकासुर सूदनाय नमः

அந்தகா ஸுரனைச் சிக்ஷித்தவர். "ஒரு ஸமயம் தேவி லீலையாகச் சிவனது கண்ணைமூட, உலகமெல்லாம் இருண்டது. அவ்விருளிலிருந்து தோன்றிய அந்தகா ஸுரன் மூவுலகையும் பீடித்ததால் பைரவர் மூலமாக அவனை இழுத்துவந்து சிவன் சூலத்தினால் குத்தித் தூக்கிப் பிடித்து நெற்றிக்கண்ணால் "அவன ஹங்காரத்தையும் பாபத்தையும் எரித்து முடிவில் அவனை ஓர் கணாதிபதியாகச் செய்தார்." (வாமன புராணம்.) இது திருக்கோவிலூர் க்ஷேத்ரமாம். தமோகுணத்தால் உண்டாகித் தமோகுண கார்யத்தையே செய்துவந்த அரக்கனது தமோகுணத்தை அகற்றி அவனை ஸாத்விகனாக்கிக் கணங்களுக்கு அதிபதியாகவும் செய்தது சிவனது அளவுகடந்த கருணையையும் பெருந்தன்மையையுங் காட்டுகிறது. இத்தகைய துஷ்டர்களிடம் வீரத்தைக்காட்டிய ஸ்தலங்கள் "வீரட்டாணம்" என அழைக்கப் படுகின்றன. அவ்வெட்டுக்களையும் கீழே காண்க:—

(1) திருக்கண்டியூர்—பிரம்மாவின் சிரஸை அறுத்தது.
(2) திருக்கோவிலூர்—அந்தகா ஸுரனைக் கொன்றது.
(3) திரு அதிகை—திரிபுரமெரித்தது.
(4) திருப்பறியலூர்—தக்ஷன் சிரஸை அறுத்தது.
(5) திருவிற்குடி—ஜலந்தரா ஸுரனைக் கொன்றது.
(6) வழுவூர்—யானையை உரித்தது.
(7) திருக்குறுக்கை—காமதஹநம்.
(8) திருக்கடையூர்—யமனை உதைத்தது.

## 27. ஓம் கங்காதராய நம:

## २७. ओं गङ्गाधराय नमः

கங்கையைத் தரித்தவர். ஹிமவானது புத்திரியான குடிலா என்பவள் பிரம்மனது சாபத்தினால் கங்கை ஜலமாக, அதைப் பகீரதன், கபிலரது சாபத்தால் மாண்ட மூதாதைகளுக்கு நற்கதி அளிக்கும்பொருட்டு தேவலோகத்திலிருந்து அழைத்தான். "என் வேகத்தைப் பொறுக்கப் பரமசிவனை அன்றி வேறுயாரால் முடியும்" என்று அவன் கூற, பகீரதன் வேண்டுகோளுக்கிணங்கி பரமசிவன் கங்கையைத் தரித்தார். (இது வாமனாதி புராணங்களில் பிரஸித்தம்.) "ஹே சிவ! கங்கை பாவனமென்று உன்னால் தரிக்கப்படவில்லை. காலகூட விஷம் ருசியென நீ சாப்பிடவில்லை. கருணையினால் உலகைக் காக்க வேறு எவராலும் முடியாத இந்தக்காரியத்தைச் செய்தீர்" (அப். தீக்ஷிதர், ப்ரம்மதர்க்கஸ்தவம்) இந்த நாம பகவான் பக்தர்களுக்குப் பரவசமாகி எந்த வேலையையும் செய்கிறவர் என எண்பிக்கின்றது."

## 28. ஓம் லலாடாக்ஷாய நம:

## २८. ललाटाक्षाय नमः

நெற்றியில் கண்ணுள்ளவர். லோகப்ரஸித்தமான இடத்தைவிட உயர்ந்த நெற்றி ஸ்தானத்திலுள்ளகண், இவர் உலகை விட உயர்ந்தஅறிவுள்ளவர் என்று எண்பிக்கின்றது. (சிவதத்வரஹஸ்யம்)

சிவனே கிழவேஷத்துடன், தவம்செய்யும் உமையவளை அணுகி விரூபமானகண்ணுள்ளவனை விசாலாக்ஷியான நீ எப்படி மணப்பதென்று கேட்க, "அது ஜ்ஞானக்கண். உமக்குத்தெரியாது. ஞானிகளுக்குத்தான் அதன் தத்வம் தெரியுமென்றாள் தேவி. ஸ்காந்தம்.

## 29. ஓம் காலகாலாய நம:

## २९. ओं कालकालाय नमः

யமனுக்கு யமனாக உள்ளவர். இதுகாலகாலம் எனும் எட்டாவது மூர்த்தியாம் இதுவும் ச்ருதி ப்ரஸித்தநாம.

மார்க்கண்டேயன் ச்வேதன் இவ்விருவர்களையும் கொண்டு செல்லவந்தயமனைச் சிக்ஷித்ததுமாத்ரம் அல்லாமல் பக்தர்களுக்கு ஜனன மரண மில்லாமல் செய்பவர் என்றும் கருத்து. பிறப்பிறப்பே காலன் அதை அழிக்கும் காலன் இவன்.

(1) திருக்கடையூர் க்ஷேத்ரம் மார்க்கண்டேயனைக் காத்தது.

(2) சுவேதாரண்ய க்ஷேத்ரம் ச்வேதனைக்காத்தது.

எல்லோரையும் கொண்டு செல்லும் யமனையும் பிரளய காலத்தில் அழித்துத் தன்னிடம் லயிக்கும்படி செய்கிறவர் என்ற பொருளும் பொருந்தும்.

## 30. ஓம் க்ருபா நிதயே நம:

## ३०. कृपानिधये नमः

(தயாமூர்த்தி. ஸ்ரீலலி. 581)

கருணாநிதி. க்ருபையென்பது பிறர்படுந்துன்பத்தை அகற்ற வேண்டுமென்ற ஆசையாகும். அது இவரிடம் நிறைந்திருக்கிறது. அதனால்தான் துன்பமடையும் ஸகல உலகையும் தனக்குள் அடக்கி துன்பமடையாமல் லயப்படுத்தும் தொழிலைக் கைக் கொண்டார்

## 31. ஓம் பீமாய நம:

## ३१. ओं भीमाय नमः

பயப்படும்படி செய்பவர். " எல்லா வற்றிற்கும் இடமளிப்பதும் எங்கும் வியாபித்து நிற்பதும் பஞ்சபூதங்கள்

இன்னவை என்று பிரித்துக் காட்டுவதுமான ஆகாச வடிவமான மூர்த்தி." எனசிவ புராண வசநத்தின்படி ஆகாசவடிவமான மூர்த்திக்குப் பீம என்று பெயர்.

"இவரது உத்திரவினால் பிராணன் பயந்து ஸர்வப் பிராணிகளின் உடலையும் பிரிக்கிறது. அக்கினி தேவாதிகளுக்கு ஹவ்ய கவ்யங்களைச் சுமக்கிறது. பாகத்தையும் செய்கிறது." (லிங்க புராணம்) இது ஆகாச அதிஷ்டான மூர்த்தி. இதுவும் ச்ருதிப் பிரஸித்தமான நாம.

## 32. ஓம் பரசு ஹஸ்தாய நம:

## ३२. ओं परशु हस्ताय नमः

கோடாலியைக் கையிலுடையவர். "பரசு என்பது ஸத்ய நிஷ்டையின் அடையாளம். ஸத்யகாமன் ஸத்ய ஸங்கல்பன் என்னும் சுருதி இவரது ஸத்ய நிஷ்டையை விளக்குகிறது." (சிவ தத்வ ரஹஸ்யம்)

"ஸத்யம் சௌசம் கபடமில்லாமை த்யாகம் தபஸ் நியமம் பொறுமை தைர்யம் பக்தி இவைகளால் முக்காணத்தாலும் கிருஷ்ணன் என்னை உபாஸிப்பதால் எனக்கு அவரிடம் மிகப்பிரியம் உண்டானது" எனச் சிவன் சொன்னதாகப் பாரதம் அநுசாஸநிகபர்வா கூறுகிறது.

## 33. ஓம் ம்ருக பாணயே நம:

## ३३. ओं मृगपाणये नमः

மானைக் கையிலுடையவர். தாருகாவனத்திலுள்ள ருஷிகளது ஆபிசார ப்ரயோகத்தினால் படைக்கப்பட்ட மிருகம், சிவன் அருகில் வர "அவர்கள் பக்தியில்லாதவர் மிருகத்திற்கு ஸமம்" எனக்காட்டுபவர்போல் இடது கையில் அதை யேந்தினார். (ஸ்காந்தம்.)

மந்த்ர சாஸ்த்திரத்தில் ம்ருகம் என்பது வேதம் எனக் கூறப்படுகிறது. ம்ருகம் என்ற சொல்லுக்கு யாசித்

தல் என்பதும் பொருள். ம்ருக யாசகத்தை பாணி கையால் கேட்டும் பிக்ஷாடன மூர்த்தியாக தாருகாவனம் சென்றார் என்பதும் பொருந்தும். (சிவதத்வ ரஹஸ்யம்.) தான் மஹேசன் பிள்ளை கணேசன், தோழன் தனேசன், மாமனார் கிரீசன், இப்படியிருந்தும் பகவான் ஏதோ ஒரு ஒப்பற்ற ஆசையால் பிக்ஷையெடுத்தார் என்று ஒரு கவி கூறும்வண்ணம் பகவான் பிக்ஷையெடுத்தது தன்பொருட்டல்ல, தாருகாவன ரிஷிகள், பக்தியைக்கொள்ள வேண்டுமென்ற ஆசையினால் என்பது ஸ்பஷ்டம்.

## 34. ஓம் ஜடாதராய நம:

## ३४. ओं जटाधराय नमः

ஜடையைத் தரிப்பவர். "ஜடை தவக்கோலத்தைக் குறிப்பதாகும். அன்றியும் அது ஸர்வ தீர்த்தங்களுக்கும் ஆதாரமான மலைகளும் ஸமுத்திரமுமாம்." (வராஹபுராணம்) "தக்ஷயாகத்தில் பாசுபதாஸ்திரம் ஏற்று மான் வடிவமெடுத்து ஓடும் க்ருதுவைத் தொடர்ந்து சென்றவர் ஜடாதரமூர்த்தி" (வாமன புராணம்) ஸர்வதீர்த்தங்களுக்கும் ஆதாரமான மலைகளையும், அந்நதிகள் ஸங்கமமாகும் ஸமுத்திரங்களையும் ஜடாவடிவமாகப் பகவான் சிரஸில் தரித்துக்கொண்டிருப்பவர், எனத் தெரிகிறது. இந்தத் தத்துவத்தைப் பாரத ஆநுஸாஙிகபர்வாவில் தீர்த்தயாத்ரா ப்ரகரணத்தில் உமையவளை நாடி சிவனே கூறுகிறார். "சரீரசுத்தியுடன்கூட புண்ய தீர்த்தங்களுக்கு ஜடாதரனை என்னை நினைத்துக்கொண்டே சொல்ல வேண்டும்."

## 35. ஓம் கைலாஸ வாஸிநே நம:

## ३५. ओं कैलास वासिने नमः

(மஹா கைலாஸ நிலயா ஸ்ரீலலி-ஸ. 578)

கைலாஸத்தில் வசிப்பவர். கேலி—விளையாட்டு அதன் கூட்டம் கைலம் அதுஉள்ள இடம் கைலாசம்—அதாவது

சிவாலயம். கைலாஸமென்றால் சிவன் திருவிளையாடல் நடக்கும் இடம் என்று பொருள். இது இமயமலை, மேருமந்தரம், வைகுண்டத்திற்குமேல் உள்ள ஓரிடம், என மூன்றுஸ்தலங்களிலிருக்கின்றன. இவை கர்ம நிஷ்டர்களால் அடையத்தக்கன. அங்குசென்றவர் மறுபடியும் புண்ணியமான பின்பு பூமிக்குத் திரும்புவர். "சிவபுரத்திற்குமேல் ஸ்கந்தன் உமையவள் சங்கரர் இவர்களுக்குத் தனித்தனி பரம சுத்தமான மூன்று ஸ்தானங்களுண்டு. அங்கு சென்றவர் சிவதுல்யர்களாகி நித்யாநந்தமனுபவிப்பர் பூமிக்குத் திரும்பார்." (சிவதர்மோத்தரம்)

பூமிக்கு எட்டுகோடி யோஜனைக்குமேல் ஸத்யலோகமெனும் பிரும்மாவின் இடமிருக்கிறது. அதற்குமேல் வைகுண்டமிருக்கிறது. அது த்யுலோகத்திலிருந்து பதினாறுகோடி யோஜனை தூரமாகும். அதற்கு மேல் பதினாறு கோடியோஜனை தூரத்தில் கைலாஸமிருக்கிறது. அங்கு பரமசிவன் விநாயகன் சுப்பிரமணியன் உமையவள் ஆகிய இவர்களுடன் லீலைசெய்கிறார். (வாயு புராணம்)

## 36. ஓம் கவசினே நம:

## ३६. ओं कवचिने नमः

கவசமுள்ளவர். "ஸர்வஜ்ஞனா யிருத்தல் த்ருப்தி, அநாதியான அறிவு, ஸ்வதந்த்ரனா யிருத்தல், எப்போதும் அகலாத சக்தி, அநந்த சக்தி இவ்வாறும் மஹேசுவரனுக்கு அங்கங்கள்." (சிவபுராணம்)

ஸ்வதந்தரமாயிருத்தல் என்ற அங்கத்திலே அதையே கவசமாகப் பூண்டவர். கவசத்திற்குப் பிறரால் காணப்படாமை, அடிக்கப்படாமை, என இருபயன்களுண்டு. ஆலயங்களில் மந்திர சக்தியால் ஸான்னித்யமடைந்த உருவிற்கு பாஷண்டாதிகளது கண்ணில் படாமலிருக்கவே கவசதாரணம் அவச்யமென ஆகமவிதி கூறுகிறது. சிவனை

அடிப்பவர் எவருமில்லை. எனினும் ஸ்வேச்சையால் கவசத்தைத் தரிக்கிறார். இதுவும் ச்ருதிப்ரஸித்த நாம.

" இவரணிவது மற்றவர் தரிக்கும் ஸாதாரணமான கவசமல்ல. இவர் உடல் நம்முடல்போல் மாம்ஸம் ரத்தம் நிறைந்ததுமல்ல. உலகைப்படைத்தல் முதலியன எப்படி லீலையோ அங்ஙனமே கவசமணிந்திருப்பதும் இவருக்கு லீலையேயாகும்.

## 37. ஓம் கடோராய நம:

## ७३. ओं कठोराय नमः

க்ரூரமானவர். பூர்ணமானவர். ருத்திரனுக்கு க்ரூரமாக ஒன்று மங்களமாக மற்றொன்று ஆக இரு சரீரங்கள் உண்டு. "உமையவள் சிவனை ஏன் இத்தகைய பயங்கரமான உருவமும் வேஷமும் உமக்கெனக் கேட்க, துஷ்ட உலகை அடக்க கோரமான ரூபமும், மற்றவருக்கு க்ஷேமமளிக்க மங்களமான ரூபமுமெடுக்கிறேன். இப்படி இல்லாவிடில் உலகம் விபரீதமாகும். என்று பகவான் கூறினார்." (பாரத ஆநுசா பர்வா.) கடோரமென்றால் பூர்ணன் என்னும் பொருளுண்டு.

"கடோரதாராதிப லாஞ்சனஞ்சவி:" எனமாக காவ்ய பிரயோகம்" கோரமான துஷ்டர்களையடக்க நெருப்புடன் கூடிய மின்னல்போன்ற உருவையும் சாந்தமான பக்தர்களைக் காக்க அமிருதத்துடன் கூடிய சந்திரிகை போன்ற உருவையும் எடுக்கிறார் என்பது கருத்து."

## ३८. ओं त्रिपुरान्तकाय नमः

திரிபுரத்திற்கு அந்தகன். இந்தக்கதை வேதத்திலும் காணப்படுகிறது. திரிபுரஸம்ஹார மூர்த்தி ஒன்பதாவது. திரிபுரமெனும் ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரங்களை அழிப்பவர் என்றும் பொருளுண்டு.

இதுவும் சுருதிப் பிரஸித்தநாம இந்த ஐதிஹ்யம் பண்ருட்டிக்கடுத்த திருஅதிகை க்ஷேத்ரத்தில் நடந்த தாகக்கூறுவர்.

ஸ்ரீ ஸுப்ரமண்யனுல் கொல்லப்பட்ட தாரகாஸுர னுக்கு, வித்யுன்மாலீ தாரகாக்ஷன் கமலாக்ஷன் என மூன்று புத்ரர்களிருந்தனர். அவர்கள் கடுமையாகத் தவம் புரிந்து பிரும்மாவினிடமிருந்து அரிய வரங்களைப் பெற்ற னர். அதன்படி ஸ்வர்ணம் வெள்ளி இரும்பு இவைகளா லாகியவையும், நினைத்தவிடஞ் செல்பவையுமான மூன்று நகரங்களைப்பெற்றனர்.

இம்மூன்றும் ஆயிரமாண்டுகளுக்கோர் முறை க்ஷண நேரம் ஒன்று சேரும். அச்சமயம் அபூர்வமான சிவனது பாணத்தினுல் தான் அவர்களுக்கு மரணம் தோன்றும். ஆதலால் கர்வங்கொண்டு அவர்கள் மூவுலகையும் பீடித் தனர்.

தேவர்களது பிரார்த்தனைக்கிணங்கி கைலாஸநாதன் மேருமலையை வில்லாகவும் சேஷனை நாண் கயிறுகவும் வாயு அக்நி அச்யுதன் ஆகிய இவர்களை அம்பாகவு மமைத்து உலக வடிவான தேரில் சந்திர ஸூர்யர் சக்ர மாக நாலு வேதங்களும் குதிரைகளாகப் பிரும்மா பிரணவ மெனும் சாட்டையை ஏந்தி காயத்ரீ எனும் கடிவாளத் தைக் கரத்தில் பிடித்து ஸாரத்யம் செய்ய அவ்வசுரர் ஒன்று கூடியபோது மந்தஹாஸத்தால் சிவன் அவர்களை எரித்தார். (ஸ்காந்தம்)

## 39. விருஷாங்காய நம:

## ३९. ओं वृषाङ्काय नमः

விருஷபத்தைக் கொடியாக உடையவன். முன் ஓர் ஸமயம் சிவன் ஒருகாலால் நின்று தவம் செய்யும்போது கொழுப்புள்ள பசுக்கள் அவரை முட்டித்தள்ள, அவை சிவ கோபத்தால் எரிந்தன. பாக்கி யுள்ளதில் வெள்ளைக்

காளை ஒன்று சிவனைப் போற்ற அதை வாஹநமாகவும் கொடியாகவும் ஏற்றுக்கொண்டார். (பா-ஆநு. பர்வா)

சுத்த ஸ்படிகம் போன்ற விருஷபமாயிருப்பது தர்மம். (சிவகாமம், பிரும்மாண்ட புராணம் ஸ்காந்தம்.)

விருஷபம் தர்மமானதால் அதைக்கொடியிலுமமைத்தார். அதை வாஹநமாகவும் கொண்டார். ஆதலின் இவரருளைப்பெற தர்மமே ஒப்பற்ற ஸாதநமென்பது கரதலாமலகமாக விளங்குகிறது. ஆதலின் ஸ்வதர்மத்தை விட்டுக் கேவல பக்தியினால் மாத்ரம் அவனருளைப்பெற முடியாது.

## 40. ஓம் விருஷபாரூடாய நம:

## ४०. ओं वृषभारूढाय नमः

விருஷபத்தின் மீதேறியிருப்பவர். "வ்ருஷஸேசனே" விருஷ எனும் தாதுவுக்கு வர்ஷிப்பது என்பது பொருள். அவரவர் விருப்பத்தை வர்ஷிப்பது அவரவர் செய்யும் தர்மமே யாகும். ஸகல தர்மங்களும் ஒன்றாகி விருஷப உருவெடுத்துப் பரமசிவத்தைச் சுமக்கின்றன. அவரது வாஹநமே நமதிஷ்டத்தை வர்ஷித்தால், அதன்மீதமர்ந்து கருணாமூர்த்தியாய் விளங்கும், கைலாஸநாதன் பக்தரிஷ்டத்தை வருஷிப்பவரெனக் கூறவும் வேண்டுமா ?

"விருஷபம் தர்மமாதலின் ஐந்து மைலுக்குள்ளிருப்பவர் விருஷப வாஹநக் காக்ஷியைத் தரிசிக்காவிடில் விலங்காகப் பிறப்பர்." ஆகமம் கூறுகிறது. அன்றியும் "திருபுர ஸம்ஹாரத்தில் சிவன் அரிய தேர்மீது காலைவைக்க, வேதக்குதிரைகள் இந்தப்பாரம் தாளாமல் முட்டியிட்டு விழுந்தன. விஷ்ணு விருஷப ரூபமெடுத்துத் தேரைத் தாங்கினார். விஷ்ணுவாகிய விருஷபத்தின்மீது தேர் தேர்மீது சிவன். ஆதலின் (பரம்பரையாக) விருஷபாரூடர்." (லிங்கபுராணம்.) விருஷபாரூட மூர்த்தி மூன்றாவதாம். த்ரிபுராந்தகன் விருஷாங்கன் விருஷபாரூடன் என்ற சொற் தொடர்க்கதையைக் கூறுவது போலுளது.

## 1. ஓம் பஸ்மோத்தூளித விக்ரஹாய நம:
## ४१. ओं भस्मोद्धूलित विग्रहाय नमः

விபூதியால் பூசப்பட்ட சரீர முள்ளவர் பஸ்ம என்ற )சால்லுக்கு (பாபரோகமாயா பாசங்களை) மிரட்டுவது ான்று பொருள். " பக்தரை ரக்ஷிப்பதற்காகவும், அவரது க்ஷேமத்திற்காகவும், அவர் சுத்தி பெறவும், சிவபக்தர் ான்ற அடையாளத்திற்காகவும் நம் பக்தருக்குப் பஸ்மா வைத்தந்தேன். (பார. ஆநு. பர்வா)

அதர்வ வேதங்கூறிய பஸ்மோத்தூளனமும் விபூதி யின் திரிபுண்ட்ரமும் மாயாபாச மகலும் பொருட்டு முனி சிரேஷ்ட்டர்களால் தரிக்கப்படுகிறது. (பிரம்மோத்ர கண்டம்.)

அதிகம் கூறுவதேன்? பஸ்மதாரணம் மோக்ஷஸாத னம். பஸ்மாவை ஸதா தரிப்பவனுக்கு விரைவில் ஞாந முண்டாகும். (வாஸிஷ்ட லிங்க.)

" பஸ்மதாரண விருதத்தை நான் செய்தேன் பிறகு நீ செய்தாய். மூன்றாவது யாரும் செய்ய வில்லை. ஆதலின் நீதநேச்வரனுகி என் நண்பனுகவுமிரு." என சிவன் குபே ரனுக்குரைத்தார். (உத்தர ராமாயணம்)

" பஸ பர்த்ஸந தீப்த்யோ:" பஸ என்ற தாதுவுக்கு மிரட்டுவது பிரகாசப்படுத்துவது என்று இருபொருள் களுண்டு. இரண்டும் விபூதி அல்லது பஸ்மாவுக்கு மிகப் பொருத்தமான பொருளாகும். பெரும்பாலும் விபூதி ருத் திராக்ஷ மஹிமையையே வெளியிடுவது " ஜாபால " மெனும் உபநிஷத்தாகும். இந்த விபூதியால் பிசாசங்கள் நோய்கள் மாத்ரமல்ல எல்லா துக்கங்களுக்கும் முதற் காரணமான அஜ்ஞானமே அகலும். இதன் மூலமாக சூலேநோய் பேய் முதலியவைகளைப் பல பக்தர்கள் அகற் றிய சரிதம் எண்ணிறந்தது, பசும் சாணியைக் காத்தி

லேந்தி பரிசுத்தமாக பக்வம் செய்து "விரஜாஹோமம் என்பதை விதிப்படி செய்து, அல்லது உத்தமமாக கூறப்படும் அக்நிஹோத்ர பஸ்மாவை விதிப்படி அணி தால் நமது துன்பமகன்று இன்பம் கைகூடுமென்பது பிர யக்ஷ பிரமாணமாகும். அதை யணிபவருக்கு ஓர் அழகை (பிரகாசத்தை) அளிப்பதால் "பஸித" மென்று பாபத்தை எரிப்பதால் "பஸ்ம" என்றும், செல்வத்தை தருவதால் விபூதி யென்றும், நம்மை ரக்ஷிப்பதால் ரக்ஷை என்றும் இதற்குப் பல பெயர்களுண்டு.

மேலானவர் செய்தால்தான் மற்றவர்செய்வர் என உலகதந்தையான சிவன் தானே விபூதியை ஸதா ஸர்வ அங்கங்களிலும் அணிந்திருக்கிறார். பிரும்மாவும் விஷ்ணு வும் இந்திரனும் அவர்கள் பத்நிகளும் கூட விபூதி யணிந் திருப்பதாக புராணங் கூறுகிறது.

## 42. ஓம் ஸாமப்ரியாய நம:

## ४२. ओं साम प्रियाय नमः

ஸாமகாகப்ரியா ஸ்ரீலலிதா. ஸஹஸ்ர நாம. 909.

ஸாமவேதத்தில் பிரிய முள்ளவர். நான்கு வேதங் களிலும் ஸாமவேதம் சிறந்தது. "மூன்று பிராமணர்கள் கிடைக்காவிடில் அவர்கள் ஸ்தானத்தில் ஸாமவேதி ஒரு வனைப் பூஜைசெய்" என் ஸ்மிருதிகள் கூறுகின்றன.

ஸ்ரீகிருஷ்ணன் "வேதங்களின் யான் ஸாமவேதம்" என ஸ்ரீகீதையில் விபூத்யத்யாயத்தில் கூறுகிறார். சாந்த மாகப்பேசுபவரிடம் பிரியமுள்ளவர் என்றும் மற்றோர் பொருளுண்டு. "அமிருதத்தைச் சிந்துவதும் சந்தனம் போல் சீதளமாயிருப்பது மான சொற்களைக்கூறுபவன் சிவலோகம் செல்வான். (சிவதர்மோத்தரம்)

ஸாம வேதபாராயணத்தால் ராவணன் கைலையிலிருந்து விடுபட்டான். ஸாமஎன்றசொல்லிற்கு கானவிசேஷம் என்பதுபொருள். கானப்ரதானமாதலால் அதற்கு ஸாம

வேதமெனப் பெயர்வந்தது. சிவன் எல்லாவேதங்களிலும் பிரியமுள்ளவர். ஸாமவேதமும் அதை அறிந்தவரும் சிறந்தவரென்ப் பல ப்ரமாண நூல்கள் கொண்டாடுவதால் தேவரில் சிறந்த சிவன் வேதத்தில் சிறந்த ஸாமத்தினிடம் பிரியம்கொள்வது இயற்கையேயாகும்.

"ரிக்கை அறிபவன் தேவர்களை அறிந்தவனாவான். யஜுஸ்ஸையறிந்தவன் யஜ்ஞங்களை அறிந்தவனாவான். ஸாமத்தை யறிந்தவன் எல்லாவற்றையுமறிந்தவனாவான்." என வேதங்கூறுகிறது.

## 43. ஓம் ஸ்வரமயாய நம:

## ४३. ओं स्वरमयाय नमः

ஸ்வரமெனும் அச்சுவடிவனாயிருப்பவர் அ, முதல் அஃ வரை அச்சு. இதிலுள்ள அ உம் என்ற எழுத்துக்களின் சேர்க்கையான பிரணவவடிவன் என்பது கருத்து 'பிரணவம் சிவனைக்கூறும் சொல். சிவன் ருத்ரன் முதலிய 'சிவநாமங்களுக்குள் பிரணவம் மிகச் சிறந்தது. அகாரம் ருக்வேதம் உகாரம் யஜுஸ், மகாரம் ஸாமவேதம், நாதம் அதர்வம்." (வாயுஸம்ஹிதா) அ என்பது ரஜோகுணத்தாலாகிய ஸ்ருஷ்டிகர்த்தாவான சதுர்முகனையும் உ என்பது ஸத்வகுணத்தாலாகிய பாலனகர்த்தாவான (ப்ரகிருதிஸ்வரூப) விஷ்ணுவையும், ம, என்பது தமோகுணத்தாலாகிய ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரனையும், அதன்மேலுள்ள நாதமானது நிர்குணனாய் நிஷ்களனாயுள்ள பரமாத்மாவையும் கூறுகின்றது. மும்மூர்த்திகளையும் அதற்குமேலான பரமாத்மஸ்வரூபத்தையும் ஓரே எழுத்தில் கூறுவதால் இது மிகச்சிறந்த நாமாவாகும். அன்றியும் வேதத்தின் ஆதியிலும் முடிவிலும் இது கூறப்படுகிறது.

ஒவ்வோர் தேவதையின் அர்ச்சனையிலும் ஒவ்வோர் நாமாவின் ஆரம்பத்திலும் இது நியமமாகக் கூறப்படுகிறது, பகவத்கீதையிலும் "ஓம்" எனும் ஓரக்ஷரமான பிரம்மத்

தைக் கூறிக் கொண்டு என்னை நினைத்துக்கொண்டே எவன் உடலை விடுகிருனே. அவன் உயர்ந்தகதியை அடைகிருன் எனப்பகவான் கூறுகிருர். இதை ஸ்த்ரீ, சூத்ரர்கள் கூறக் கூடாது தனிப்ரணவத்திற்குத் துறவிகளே அதிகாரி.

## 44. ஓம் த்ரயீமூர்தயே நம:

## ४४. ओं त्रयीमूर्तये नमः

ருக்யஜுஸ் ஸாம எனும் மூன்று வேதங்களைச் சரீரமாக உள்ளவர்.

"சப்தங்களெல்லாம் தேவி அர்த்தமெல்லாம் சிவன்" (சிவபுராணம்) நான்காவதான அதர்வவேதத்தில் ஆபிசார மந்திரமே அதிகமாதலின் அதைவிட்டு மற்ற மூன்று வேதாநுஷ்டாநத்திலேயே சிவன் பிரியமுள்ளவர் ஆதலினிப்பெயர் பொருத்தமானது.

(சிவதத்வரஹஸ்யம்) உமையவள் தனது தந்தையான ஹர்மவானிடம் "எனக்கு முதல் சரீரம் மூன்று வேதங்களே" என்பதால் சிவமும் சக்தியும் ஒன்ருனதாலுமிப் பெயர் பொருத்தமானது.

## 45. ஓம் அநீச்வராய நம:

## ४५. ओं अनीश्वराय नः

நிரீச்வரா ஸ்ரீல. ஸ. 155.

தனக்குமேல் ஈச்வரனில்லாதவர். இது சுருதிப்பிரஸித்தநாம. "அச்சிவனுக்கு மேல், பதியாக உள்ளவர் உலகில் ஒருவருமிலர். அவரையடக்கி ஆள்பவருமில்லை. அவருக்கு ஒருவகையான அடையாளமுமில்லை. அவரே எல்லாவற்றிற்கும் காரணம். காரணங்களுக்கும் அதிபதியாயுள்ள தேவதைகளுக்கும் இவர் அதிபர். இவரையுண்டுபண்ணுபவன் யாருமில்லை." என ருக்வேதம் கூறுகிறது.

## 46. ஓம் ஸர்வஜ்ஞாய நம:

### ४६. ओं सर्वज्ञाय नमः

ஸர்வக்ஞா ஶ்ரீல. 196.

எல்லாமறிந்தவர். இதுவும் சுருதிப்ரஸித்தநாம. "எவன் ஸர்வஜ்ஞனே ஸர்வத்தையுமறிந்தவனே எவனது தபஸ் (ஆலோசனை) ஜ்ஞானமயமோ அவன் உலகைப் படைத்தவன். எல்லாமறிந்தவன். தனக்குத்தானே காரணமானவன். அறிவுவடிவன் காலகாலன், ஸர்வ நற்குணமுள்ளவன்" என்று ச்ருதி வர்ணிக்கிறது.

## 47. ஓம் பரமாத்மநே நம:

### ४७. ओं परमात्मने नमः

சிறந்த ஆத்மா—சிறப்பு என்பது எல்லா ஜீவர்களிடமும் அந்தர்யாமியாயிருத்தலாம். "எந்த ருத்ரர் அக்நியிலும், எவர் ஜலத்திலும் எவர் ஔஷதிகளிலும் எந்த ருத்ரர் ஸகல புவநங்களிலும் நுழைந்திருக்கிறாரோ அந்த ருத்ரனுக்கு நமஸ்காரம்" எனச்ருதிகூறுகிறது. சிவபுராணத்தில் மிக முக்கியமாகக் கூறப்பட்ட எட்டு நாமாக்களில் (46-47) முன் நாமாவும் இதுவும் சேர்ந்தது.

"பரமசிவன் ஸூக்ஷ்மத்திலும் ஸூக்ஷ்மனாய் ஜகத் ஸ்ருஷ்டாவாய் கணக்கில்லா உருவாய் உலகை ஒன்றாய் வியாபித்திருப்பவராக இருக்கிறார். அவரேகாலம் அவரே உலகைக் காப்பவர். உலகிற்கு அதிபதி. ஸர்வ பூதங்களிடத்திலும் மறைந்திருப்பவர். அந்தப் பரமனிடம் மனதைவைத்து தேவரிஷிகள் அவனை நன்குணர்ந்து யமபாசத்தை அறுக்கின்றனர். நெய்யிக்குமேல் ஆடைபோல் அதிஸூக்ஷ்மமாய் ஸகலபிராணிகளிடமும் மறைந்துள்ள உலக வியாபியான இவனொருவனை உணர்ந்தால் ஸர்வ பாபங்களும் அகலும்" என்பதுபோன்ற பல ச்ருதிகள் இவர் பரமாத்மா என விளக்குகின்றன.

## 48. ஓம் ஸோம ஸூர்யாக்நிலோசனய நம:

## ४८. ओं सोमसूर्याग्निलोचनाय नमः

"சந்திரன் சூரியன் அக்நி இவர்களைக் கண்களாக உடையவர் சூரிய சந்திர அக்நிகளைக் கண்களாக உடையவனும் மூவ்வுலகிற்கும் ஸாரமாக உள்ளவனும் அபாரனும் ஆதியும் ஜனனமரணமில்லாதவனுமான ருத்ரனை உபாஸித்து அவனருளை அடையாமல் உலகில் யார் சாந்தியடைய முடியும்?" என வேதவ்யாஸர் மஹாபாரதத்தில் கூறுகிறார்.

மூன்றுகண்ணாக அமைந்தவை மூன்று ஜ்யோதிஸ்கள். அவை தாபத்தையும் பிரகாசத்தையுமளிப்பன. நமக்கோ ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என மூன்றுவகையான தாபமிருக்கிறது. நம்மை அக்ஞான இருள் சூழ்ந்துளது. மூன்று ஜ்யோதிஸ்ஸை அடக்கிக் கண் ஸ்தானத்தில் வைத்திருப்பவனை வேண்டினால்தான் மூன்றுவகையான தாபமுமகன்று சாந்தியுண்டாகும். இருளகலும் என இதன் விரிவுரையாகும்.

## 49. ஓம் ஹவிஷே நம:

## ४९. ओं हविषे नमः

ஹோமம் செய்யும் பொருளாயிருப்பவர். பெரும்பாலும் ஹோமத்திரவியங்கள் பூமியிலுண்டாகின்றவைகள். பூமி அஷ்டமூர்த்திகளில் முதன்மையானது. (சிவதத்வ ரஹஸ்யம்) "ரஸவர்க்கமெல்லாம் பார்வதீ. அதை அநுபவிப்பவரெல்லாம் சிவன்" என சிவபுராணம் கூறுகிற வண்ணம் போக்யவஸ்துவான ஹவிஸ்ஸும் உமையவளே. சக்தியைவிட வேறல்லாதவனானதால் சிவன் ஹவிஸ்வடிவனாக வர்ணிக்கப்படுகிறார். அன்றியும் "பிரும்மமே அர்ப்பணம் செய்தலும் ஹவிஸ்ஸும் அக்நியும் ஹோமமும் அதனால் அடையவேண்டியதும் பிரும்மமே" எனக்

கீதை கூறுகிறபடி எல்லாம் சிவனுகயிருக்க ஹவிஸ்வடிவ ளுக யிவனிருப்பதும் மிகப்பொருத்தமேயாகும்.

## 50 ஓம் யஜ்ஞமயாய நம:

## ५०. ओं यज्ञमयाय नमः

யஜ்ஞங்களுக்கெல்லாம் யஜமானனுயிருப்பவர் யக்ஞ ரூபா. ஸ்ரீல. 759 "மய" என்றபதம் அதிகம், அதன் மாறுதல் என்ற இரு அர்த்தங்கொண்டது. அரிசி கல்மய மாக இருக்கிறதென்னில் அரிசியில் கல் அதிகமாகயிருக்கிற தெனப் பொருள், தங்கமயமான குடமெனில் தங்கத் தாலாகியதெனப் பொருள். இதில் சிவன் "யஜ்ஞமயர்" என்றால் பெரும்பாலான யஜ்ஞங்களால் உபாஸிக்கப்படு கிறவர் என்று பொருள் சிவனில்லாதயஜ்ஞமே கிடையாது. சிவனை விலக்கித்தக்ஷன் ஆரம்பித்தயஜ்ஞம் எப்படி அழிந்த தென்பது பிரஸித்தம். பெரும்பாலான யக்ஞங்கள் சிவனைப்போற்றுவது மாத்ரமல்ல எல்லாதேவதா வடிவ மாக இருந்து எல்லா ஹோமங்களையும் அவரே ஏற்கிறார். அதுமாத்திரமல்ல. ஒவ்வோர் யஜ்ஞத்திலும் சிவனுடைய பெயரைக்கூறி மற்றதேவர்களைப்போல் இவருக்கு ஓர் ஹோமம் உண்டு. "ஸ்விஷ்டகிருத்" என்ற வகையில் தனித்தனி அந்தந்த தேவர்களுக்குரிய ஹவிஸ்ஸிலும் ஓர் பங்கெடுத்து ஹோமம் செய்வது இவருக்கு இரண்டா வது பங்காகும். யஞ்ஜத்தில் மிகுந்த பொருளெல்லாம் ருத்ரனைச் சார்ந்தது இது மூன்றாவது பங்காகும். ஹவிஸ் ஸாகவும் அக்நியாகவும் யஜ்வாவாகவுமிவருப்பதால் இவ ரிடம் இருவகையாகவும் பொருள்கொண்ட யஜ்ஞமயர் என்றசொல் மிக அர்த்தபுஷ்டியுள்ள நாமமாகும்.

## 51. ஓம் ஸோமாய நம:

## ओं सोमाय नमः

உமையுடன் கூடியவர். "உமா ஸஹாயம்" எனச்சுருதி கூறுவதால் அர்த்தத்தாலிதுவும், சுருதி பிரஸித்த நாம.

ஸோம யாகத்தில் உபயோகிக்கப்படும் ஸோமலதா வடிவன் என்னும் பொருள். "ஸோமன் (லதாவடிவனான சிவன்) புத்தி ஆகாசம் பூமி அக்நி சூர்யன இந்திரன் விஷ்ணு முதலியவர்களைப் படைக்கிறான். ஸகல பாவங்களையும் அகற்றுகிறான்." (ஸநத்குமாரஸம்ஹிதை)

ஸோம யாகம் என்பது யாகங்களில் முதலில் செய்கின்ற யஜ்ஞமாகும். அதற்கு அக்நிஷ்டோமம் என்றும் பெயருண்டு. அதில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுவது ஸோமலதை. இதை ஸோமராஜா என்றழைத்து அதற்கு ராஜோபசாரம் செய்யப்படுகிறது.

இதை இடித்து அதன் ரஸத்தை ஹோமம் செய்து மிகுதியை ருத்விக்குகள் யஜமானனுடன் பருகுவார்கள். "அத்தகைய ஸோம (லதையால்) ஆராதிக்கத்தக்க ஸோமனைப் பூஜித்தால் மஹேச்வரனான பரமாத்மாவின் நிஜ ஸ்வரூபத்தை நன்கு உணரலாம். என ஸ்காந்தம் கூறுகிறது. இதில் ஸோம என்ற சொல்லின் இரண்டர்த்தமும் செவ்வனே விளக்கப்பட்டிருக்கிறது.

## 52· ஓம் பஞ்சவக்த்ராய நம.

## ५२. ओं पञ्चवक्त्राय नमः

பஞ்சவக்த்ரா. ஸ்ரீலலி. ஸ. 515.

ஈசானுதி ஐந்துமுக முள்ளவர். (1) ஈசானம் என்பது மேல் முகம்· சுத்த ஸ்படிகம்போல் வெண்மையானது· போக்தாவான ஹிரண்ய கர்ப்பனுக்கு அதிஷ்டாதாவாயுள்ளது. (2) கிழக்கிலுள்ளது தத்புருஷம். பாலசூர்யனைப் போன்றது. போக்ய தத்வ அதிஷ்டாதாவாயுள்ளது. தபஸ் செய்வது (3) தெற்கிலுள்ளது, அகோரம். மயிலைப்போன்றது. புத்தி தத்வ அதிஷ்டாதா, பிரஜைகளை ஸம்ஹரிப்பது. (4) மேற்கிலுள்ளது வாமதேவம். பவழம் போன்றது. அஹங்காராதிஷ்டாதா. உலககார்யத்தைக் கவனிப்பது. (5) வடக்கிலுள்ளது ஸத்யோஜதம். சந்திரன் போன்றது

மனஸுக்கு அதிஷ்டாதா வேதாத்யயநம் செய்வது இவ்வைந்து முகங்களே ஐந்து பூதங்கள். ஐந்து தன்மாத்ரைகள். ஐந்து ஞானேந்திரியங்கள். ஐந்து கர்மேந்திரியங்கள். புருஷன் பிரகிருதி புத்தி அஹங்காரம் மநஸ் என்னும் ஐந்து தத்வங்கள். நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி சாந்த்யதீதம் என்னும் ஐந்து கலைகள். பிரும்மா விஷ்ணு ருத்ரன் மஹேச்வரன் ஸதாசிவன் எனும் ஐந்து மூர்த்திகள் சிவஸாதாக்ய அமூர்த்த ஸாதாக்ய மூர்த்த ஸாதாக்ய கர்த்ரு ஸாதாக்ய கர்ம ஸாதாக்ய எனும் ஐந்து ஸாதாக்யங்கள். எனவும் வர்ணிக்கப்படுகின்றன. (சிவபுராணம் ஆகமம்.)

ஸுந்தன் உபஸுந்தன் எனும் இரு ராக்ஷஸர்கள் தங்களில் ஒருவருக்கொருவராலேயே மரணம். மற்றவைகளால் இல்லை. என வரம்பெற்று முவ்வுலகையும் வருத்தினர். அவர்களை அழிக்க அழகான வஸ்துக்களிலிருந்து திலம் திலமாக (எள்ளளவு) அழகை எடுத்து திலோத்தமையை விச்வ கர்மா படைத்து அனுப்ப, அவள் தவம் செய்யும் பரமசிவனைப் பக்தியுடன் பிரதக்ஷிணம் செய்தாள். அவளுக்கு அருள் புரிய (ஏற்கனவே லயித்திருந்த) நான்கு முகங்களையும் நாலு திக்குகளிலும் படைத்தார். (பார. ஆநு. பர்வா.) இந்நாம ஸர்வ ஜகத்வடிவன். கருணை மூர்த்தி என விளக்குகிறது.

ஊர்வசியின் அழகைக்கண்டு மயங்கி அதற்காக நாலு புறமும் முகமெடுத்தாரே என ஸந்தேஹிக்க இடமில்லை. ஏனெனில் திலோத்தமையையும் ரதியையும் மற்ற அழகுள்ள பெண்களையும்விட மிக மிக அழகான பார்வதீ தேவியைக் கண்டும், அவள்வேண்டியும், தவம்செய்தும், தேவர்கள் வேண்டியும், காமன் தூண்டியுங்கூட, சிறிதும் தவத்திலிருந்து இவர் மனம்சலிக்கவில்லை. ஆசையையுண்டு பண்ணும் மந்மதனையே எரித்தார். என்பதனால் இவரது வைராக்யம் எத்தகையதென ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

திலோத்தமை ஸுந்தோபஸுந்தரர்களை மயக்கித் தலை ளைப் படைத்தனுப்பிய யஜமாநனுடைய கார்யம் ஒழுங் காக நடைபெறுவதற்காகவே தவம் செய்துகொண்டிருக் கும் சிவனை ப்ரதக்ஷிணம் செய்தாள். அந்த பக்தைக்கு அருள்புரிவதுமாத்ரமல்ல, அஸுரவதரூபமான லோக ஹிதத்தையும் நாடி அவளுக்கு அங்ஙனம் அருள்சொரிந் தார். அவ்வண்ணம் அவர் செய்திராவிடில் அவள் அஸு ரர்களை வென்றிருக்கமுடியாது. ஆதலின் மற்ற பக்தர்கள் பிரதக்ஷிணம் செய்யும்போது ஏனிப்படி நாலுமுகங்கள் தோன்றவில்லை என்ற சங்கைக்கு இடமில்லை.

## 53. ஓம் ஸதாசிவாய நம:

### ५३ ओं सदाशिवाय नमः

ஸதாசிவா. ஶ்ரீல. 272

எப்போது முள்ளவரானசிவன். ஆயிரம் சதுர் யுகம் ஓர் கல்பமாகும். ஆயிரம் கல்பம் ஒரு வருஷம். இந்த வருஷம் எண்ணுயிரம் கொண்டது ஓர் யுகம். ஆயிரம் யுகம் ஓர் ஸவநம். ஒன்பதாயிரம் ஸவநம் பிரும் மாவின் பூர்ண ஆயுஸாகும். இது விஷ்ணுவுக்கும் ஓர் தினமாகும். முன்கூறியது போன்ற விஷ்ணுவின் பூர்ண ஆயுஸ் ருத்ரனுக்கு ஓர் நாளாம். ருத்ரனது பூர்ண ஆயுஸ் மஹேச்வரனுக்கோர்தினம். மஹேச்வரனது பூர்ண ஆயுஸ் ஸதாசிவனு ஓர் நாளாகும். இவரது பூர்ணுயுஸ் பரமேச் வரனுக்கு ஓர் தினமாகும். பரமேச்வரன் காலத்தைக்கடந் தவன். அவனே ஸதாசிவம் என்பதின் பொருள். (சிவ புராணம்) இதுவேதப் பிரஸித்த நாம. இதிலுள்ள ருத்ரன் மஹேச்வரன் ஸதாசிவன் என்ற சொற்கள் ஒரே சிவனுக் குப் பர்யாய நாமாக்கள்போல் கூறப்படினும் இங்கு கூறப் பட்ட ஆயுளின் கணக்கைக்கொண்டே இவர்கள் வெவ் வேறு மூர்த்திகள் என்றும் ஒருவரைவிட ஒருவர் சிறந்த வர் என்றும் ஸதாசிவனே எல்லோரிலும் சிறந்தவர். அவரே நாமரூபமற்ற பரமாத்மா. எக்காலத்தும் அழியா

தவர் என்பதும் ஸித்தாந்தம். "இந்த ஸதாசிவம் இருமூச்சு விடும்வரை பிரும்மா பிழைத்திருக்கிறார். நான்கு மூச்சளவு மஹாவிஷ்ணுவின் ஆயுஸ்ஸாகும்." என்று பாத்ம புராணங்கூறுகிறது. எப்போது சிவமாகவே இருப்பவர் என்றும் பொருள்.

## 54. ஓம் விச்வேச்வராய நம:

## ५४. ओं विश्वेश्वराय नमः

ஸர்வேச்வரீ. ஸ்ரீ. ல. ஸ - 202.

உலகிற்கெல்லாம் ஈச்வரன். காசீ க்ஷேத்ரத்தில் விளங்கும் நாம இது. அதைத் தழுவி தென்னாட்டிலும் பல க்ஷேத்ரங்களிலுமிப்பெயர் வழங்கி வருகின்றது.

"உலகைப்படைத்து அதற்குச் சில அதிபதிகளையும் படைத்து மஹாத்மாவான ஈச்வரன் அவர்களுக்கும் அதிபதியாக விளங்குகிறார். என்று மந்ரோபநிஷத் கூறுகிறது. "ஸர்வேச்வரன்" என்று சுருதி வர்ணிப்பதால் அர்த்தத்தினால் இந்த நாம ச்ருதி ப்ரஸித்தமாகும்.

## 55. ஓம் வீரபத்ராய நம:

## ५५. ओं वीर भद्राय नमः

வீரபத்ரனாயிருப்பவர். தக்ஷன் சிவனை விலக்கி ஓர் யாகம் செய்ய, தேவி அதற்குச் சென்றபோது தக்ஷன் செய்த சிவ நிந்தையை ஸஹியாமல் உடலை விட்டாள். இதைக்கேட்ட சிவன் கோபங்கொண்டு வீரபத்ரனைப் படைத்துத் தக்ஷனைச் சிக்ஷித்தார். (ஸ்காந்தப்). மஹேச்வரமூர்த்திகளில் இது பன்னிரண்டாவதாகும்.

வீரபத்ருடைய உற்பத்தி பல புராணங்களில் பல வகையாகக்காணப்படுகிறது. சிவனது கோபத்தினால் உண்டு பண்ணப்பட்டதாக ஸ்காந்தமும் சிவபுராணமும்

கூறுகின்றன. வியர்வையிலிருந்து உண்டானதாகப் பிரு மாண்டபுராணம் சொல்லுகிறது. கோபத்தினுல் வியர்வை யுண்டாகலாம். அதனுல் முற்கூறியதுடன் இதையும் சேர்க்கலாம். வாமன புராணமும் வராஹ புராணமும் தேஜஸிலிருந்து உண்டானதாகக்கூறுகின்றன. சிவன் ஜடை யிலிருந்து ஓர் கேசத்தை எடுத்ததாகவும் அதேவீரபத்ரனு கத் தோன்றியதாகவும் மற்ருென்று கூறுகிறது. இங் ஙனம் பலவாருகக் கூறப்படின் எது பிரமாணம் என்று ஸந்தேஹமுண்டாவது இயற்கையே. இத்தகைய சிடுக்கு களை எடுக்கவே மீமாம்ஸை என்ற சாஸ்திரந் தோன்றிற்று. அது இத்தகைய விடத்தில் ஓர்வழிகாட்டுகிறது. அதா வது புராணங்களில் வெவ்வேருகக் கதை கூறப்படின் ஒவ்வோர் கல்பத்தில் நடந்தகதையைக் கூறுவதால் எல் லாம் பிரமாணமேயாகும் என்பதாம்.

## 56. ஓம் கணநாதாய நம:

## ५६. ओं गण नाथाय नमः

கணங்களுக்கு நாதன். சிவகணங்கள் பல கோடிக ளுண்டு. வீரபத்திருடன் தோன்றியவை சில. ருத்ரனுல் படைக்கப்பட்டவை பல. எல்லாவற்றிற்கும் இவர் நாதன். கணநாதன் கணேசன் கணபதி என்பன விநாயகாது பர்யாய நாமங்கள் என்ருலும் விக்நேச்வரர் போன்ற பல கணநாதர்களுக்கும் இவர் நாதன். ஆதலின் இச்சொல் சிவனுக்கே ஏற்றது. நந்தி பிருங்கி மஹாபலி பாணன் முதலிய மிகப்ரஸித்தமான சிவகணங்களுக்கு நாதன் என்றும் கூறலாம்.

## 57. ஓம் ப்ரஜாபதயே நம:

## ५७. ओं प्रजा पतमे नमः

பிரஜாபதி வடிவனுக யிருப்பவர். ஜகத்ஸ்ருஷ்டியிலீடு பட்டவரனைவரும் பிரஜாபதிகளே. அவர்களுக்கு அந்தர்

பாமியாயிருப்பதுடன் ஸ்தாணு ருத்ரர் என்பவர் இத் தகைய பிரஜாபதிகளில் ஒருவர். ஆதலின் சிவனே ஸாக்ஷாத் பிரஜாபதியாகவுமாவார். ஆயிரக்கணக்காக ருத்ரனால் படைக்கப்பட்டவர் உலகிலிருப்பதாக ஸ்ரீருத்ரம் கூறு கிறது. புராணங்களுமதை ஆமோதிக்கின்றன.

## 58. ஓம் ஹிரண்ய ரேதஸே நம:

## ५८. ओं हिरण्य रेतसे नमः

ஸ்வர்ணமயமான ரேதஸ் உள்ளவர். சிவனது வீர்யம் நெற்றிக்கண்வழியாக வெளியில் கிளம்பிவரும்போது பூமி யில் அது எங்கு எங்கு சிந்திற்றோ அவ்விடமெல்லாம் ஸ்வர்ணமாயிற்று. (ஸ்காந்தம்)

"பரமசிவன் மும்மூர்த்திகளைப் படைத்து அண்ட ஸ்ருஷ்டிக்கு முன் ஜலத்தைப் படைத்தார். அதில் தனது வீர்யத்தை விட அது ஸ்வர்ணமயமான அண்டமாயிற்று." என்று ஸௌரஸம்ஹிதை கூறும் வண்ணம் ஸ்வர்ண மயமான ரேதஸ்ஸை உடையவர். ரேதஸ் என்பது ஒன்றை உண்டுபண்ணுவதற்குக் காரணமான பொருள். ஹிரண்யத்தை உண்டுபண்ணும் ரேதஸ்ஸை உடையவர் என்றும் கூறலாம்.

இவரது ரேதஸ் விழுந்த இடமெல்லாம் மிகப் பிரகாச மான ஸ்வர்ணம் உண்டாயிற்று. என்று ஸ்ரீராமாயணங் கூறுவது இரண்டாவதாகக் கூறிய பொருளுக்குப் பிர மாணமாகும்.

## 59. ஓம் துர்தர்ஷாய நம:

## ५९. ओं दुर्धर्षाय नमः

அசைக்கமுடியாதவர். "திருஷ்" என்ற தாது ப்ரா கல்ப்யம் என்ற பொருளுள்ளது. ப்ராகல்ப்யம் உள்ளவரை எவரும் அவமதிக்கமுடியாது. ஆனதால் லக்ஷணையாக

எவராலும் அசைக்கவோ அவமதிக்கவோ முடியாதவ என்று பொருள். "அவருக்கு ஸமமோ அவருக்கு மேல னவரோ கிடையாது" என வேதங்கூறுகிறது.

## 60. ஓம் கிரீசாய நம:

## ६०. ओं गिरीशाय नमः

மலைக்கு ஈசன். கைலாசமெனும் மலைக்கு ஈசன். அதுமாத்ரமல்ல. மேருமந்தரம் முதலிய ஸகல மலைகளுக் கும் இவர் ஈசன். ஜகதீசன். ஜகத்தில் அடங்கியது மலை. என்ற வகையிலும் கிரீசன் எனக்கூடும் என்றாலும். ஹரிவம்சம் தன்யாச் சர்யோபாக்யானம் என்ற விடத்தில், மலைகளே தங்களுக்குச் சிவன் ஈசன் என கூறுகின்றன. "நாரதரே நாங்கள் தன்யர்களல்ல. ஆச்சர்யமானவர்களு மல்ல. ஏனென்றால் எங்களுக்கு எல்லாம் அதிபதியாக உள்ளவன் பரமசிவன். அவனே தன்யன் ஆச்சரியமான வன்."

## 61. ஓம் கிரிசாய நம:

## ६१. ओं गिरिशाय नमः

மலையில் ஸுகமாக வீற்றிருப்பவர். ஸுகாஸன மூர்த்தி. இருபத்து மூன்றாவது மஹேச்வர ரூபமாகும். இது சுருதிபிரஸித்த நாம. கிரியை (மலையை) "ச்யதி" சிறிதாகச் செய்கிறான் என்றும் பொருளுண்டு. திருபுர ஸம்ஹாரகாலத்தில் மேருமலையை வில்லாக்கி தரித்தால் "கிரிச" எனப்படுகிறார். முன் நாம கிரி+ஈச=கிரீச, என்று தீர்க்கமாகவும் இதைக்கிரிச என்று ஹ்ரஸ்வமாக வும் கூறவேண்டும்"

## 62. ஓம் அநகாய நம:

## ६२ औं अनघाय नमः

அநகா ஸ்ரீலலி-ஸ-987.

பாபமற்றவர். அக என்ற சொல்லுக்குப் பாபம் பாபத்தாலுண்டாகும் துக்கம் என்றும் பொருளுண்டு.

ஆதலின் பாபமும் துக்கமும் இல்லாதவர் என்று இரு பொருளும் இங்கு பொருந்தும். சிவனை நினைத்தவருக்கு அவரது புண்யநாமாவைச் சொல்பவருக்குப் பாபமும் துக்கமு மிராதெனில் அவரிடம் எப்படி இவை இருக்கும்? "இவன் பாபமற்றவன். ஜரை இல்லாதவன் மரணமில்லாதவன், சோகமில்லாதவன்." என உபநிஷத் கூறுகிறது.

## 63. ஓம் புஜங்க பூஷணாய நம:

## ६३. ओं भुजङ्ग भूषणाय नमः

பாம்பை ஆபரணமாக உடையவர். "தாருகாவந முனிவர்கள் சிவதத்துவத்தையறியாமல் ஆபிசாரத்தினால் அவரைக்கொல்ல தீயிலுண்டுபண்ண ஸர்ப்பங்களையும் ஆபரணமாகப் பூண்டவர்." (ஸ்காந்தம்)

பாம்பு என்றால் படையுமஞ்சும். அத்தகைய ஸர்ப் பங்களைப் பூஷணமாகக்கொண்டவர் என்பதினால் எல்லா வற்றையும், விசேஷமாகத் துஷ்டர்களையும், அடக்கி ஆளும் சக்திவாய்ந்தவர் என்பது ஸ்பஷ்டமாகின்றது. ஸகுணஸ்வரூபமான மகாவிஷ்ணு, விநாயகர், சுப்பிரமணி யர், முதலியவர்களுக்கும் ஸர்ப்பம் படுக்கையாகவும் ஆபரணமாகவுமிருப்பது கவனிக்கத்தக்கதாம்.

## 64, ஓம் பர்காய நம:

## ६४. ओं भर्गाय नमः

பாபத்தைப் போக்குபவர். இதுவும் வேதப்ரஸித்த நாம. "எத்தகைய பாபத்தைச் செய்தவனும் சிவாரா தநத்தினால் சுத்தமாகிறான். (சிவதர்மோத்திரம்) "காயத்ரி யின் பரமதத்வமான மஹேச்வரனை த்யாநம் செய்து கொண்டு காயத்ரியை ஜபிப்பவனே பலனை அடைகிறான்." (ஆதித்யபுராணம்)

பார்ஜ்யந்தே (பாபங்கள்) கொளுத்தப்படுகின்றன. என்று பதத்தின் பொருளாகும். காயத்ரீ என்பதே மந்த்ரங்களில் சிறந்தது. அதற்குக் காரணம். பஞ்சாக்ஷரியைப் போல் இதுவும் சிவனது ஸ்வரூபத்தை வர்ணிப்பதுடன் பர்க்க சப்தமுள்ளதினுலேயாகும். "வஸுமநஸ், என்ற அரசன் ஸூர்யமண்டலத்திலுள்ள சிவனைக் காயத்ரியினுல் ஆராதித்தான். சூர்ய மண்டலத்திலிருந்து சிவன் எழுந்தருளி அவருக்கு வேண்டியவரமளித்து மறைந்தார்." (கூர்மபுராணம்.)

## 65. ஓம் கிரிதன்வநே நம:

## ६५. गिरि धन्वने नमः

மலையை வில்லாக உடையவர். திருபுரஸம்ஹார காலத்தில் மேருமலையை வில்லாகக்கொண்டார். (ஸ்காந்தம்.)

"ஸ்திரமான தநுஸ்ஸை உடையசிவன்" என்று ஸாமவேதம் வர்ணிக்கிறது. ஸ்திரமெனும் சொல் மலை என்பதைக் குறிப்பதால் இந்த நாமாவும் அர்த்தத்தினுல் சுருதிபிரஸித்த நாமாவாகும்.

## 66. ஓம் கிரிப்ரியாய நம:

## ६६. ओं गिरिप्रियाय नमः

மலைகளிடம் பிரியமுள்ளவர். மலைகளும் நதிகளும் புண்யஸ்தலங்களாதலால் புண்யமூர்த்தியான சிவன் மலைகளிடம் அன்புகொள்வது மிகப்பொருத்தமேயாகும். அவர் அவைகளிடமுள்ள அன்பைக்காட்டவே கைலாஸமலையில் வஸிக்கிறுர். மலைமகளான பார்வதியை மணந்தார். மேருமலையை வில்லாகக்கொண்டார். கிரீச என்ற நாமத்தின்படி அவைகளுக்கு ஈசனுகவுமிருக்கிறுர். இவரது புதல்வரான ஸுப்ரமண்யனும் தந்தையை யொட்டிப் பலமலைகள் மீதே அமர்ந்திருப்பதும், "குன்று தோறுமாடல்" என்ற புகழ் பெற்றதும் கவனிக்கத்தக்கவையாம்.

## 67. ஓம் கிருத்திவாஸ்ஸே நம:

## ६७. ओं कृत्तिवाससे नमः

யானைத்தோலை வஸ்த்ரமாக உடையவர். காசியில் ஒரு அஸுரன் யானை உருக்கொண்டு சிவபக்தர்களைக் கொல்ல ஆரம்பித்தான். கருணாமூர்த்தியான பகவான் அவனைக்கொன்று அவன் தோலை ஆடையாக அணிந்தார். (ஸ்காந்தம்) பதினொன்றாவது மஹேச்வரமூர்த்தி இது.

தாருகாவனமுனிவர் ஆபிசாரத்தாலுண்டாக்கிய புலியைக் கொன்று புலித்தோலை அணிந்தார், என்றும் பொருளுண்டு. இதுவும் வேதபிரஸித்த நாம. இது வழுவூர் க்ஷேத்ரமாம்க்கருத்தி என்னும் சொல்லுக்கு யானைத்தோல் புலித்தோல் என இரண்டு அர்த்தம். ஆதலால் இரண்டர்த்தமும் பொருத்தமாகக் கூறப்பட்டது. பரமசிவம் யானையாக வந்த அஸுரனைக்கொன்று அதன் தோலையணிந்தது அவர் பக்தவத்ஸலன் என்பதையும், தாருகாவநமுனிவர் ஆபிசாரப்புலியைக்கொன்று அத்தோலையணிந்தது இந்த மந்த்ரசக்திகளுக்கெல்லாம் மேல்பட்டவன் சிவன் என்பதையும் காட்டுகிறது.

## 68. ஓம் புராராதயே நம:

## ६८. ओं पुरारातये नमः

ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரமான புரங்களுக்குச் சத்ரு.—பரமசிவனை நன்கு பூஜை செய்பவர் விதேஹ கைவல்ய மடைவர்.

"மநோ பாவத்தால் கிருஹிக்கத்தக்கவனும் அநீசன் என்றழைக்கப்படுவனும், பாவ, அபாவங்களைச் செய்பவனும்சிவனும் கலைகளைப்படைத்த வருமான தேவனை அறிந்தவனுக்கு உடல் தோன்றாது". (மந்த்ர உபநிஷத்)

## 69. ஓம் பகவதே நம:

## ६९. ओं भगवते नमः

பகவதீ. ஸ்ரீல 279.

ஐச்வர்யம் முதலிய ஆறு குணமுள்ளவர். பூர்ணமான ஐச்வர்யம், வீர்யம், யசஸ், ச்ரீ ஜ்ஞானம், வைராக்யம், என்பன, பக என்பதின் பொருளாம். அக்குணமுள்ளவர் பகவான் என அழைக்கப்படுகிறார்.

பூர்ணமான ஐச்வர்யமென்றால் ஸகலவிதமான ஐச்வர்யமும் உள்ளவர் என்று பொருள். ஸர்வைச்வர்ய ஸம்பன்னனான ஸர்வேச்வரன் ஆகாசமத்தியில் த்யானம் செய்யத்தக்கவன். என்றுச்ருதி கூறுகிறது. சரப, பைரவ, வீரபத்ராதி அவதாரங்களைச் செய்து ஒப்பற்ற வீர்யத்தைக் காட்டினார். அவர்யசஸூம் ஒப்பற்றதே. ஸ்ரீஎன்பது ஜகன் மாதாவான பார்வதீ. அவரே ஜ்ஞான வடிவனாய் ஸர்வக்ஞனாயிருப்பதால் பூர்ண க்ஞாநமுள்ளவன் என்பதும் ஸ்பஷ்டம். வைராக்யமோ அவர் வேஷத்தினாலேயே ஸ்பஷ்டமாகிறது. ஸகல பாக்யமும் வேண்டாமெனத் துறந்து தக்ஷிணாமூர்த்தியானதும் பிக்ஷாடனம் செய்வதும் இதற்குசான்றல்லவா ?

## 70. ஓம் ப்ரமதாதிபாய நம:

## ७०. ओं प्रमथाधिपाय नमः

ப்ரமதர்களுக்குத் தலைவன். அவைதிகமானவர்களை அழிப்பதால் சிவனது ஸபையிலுள்ளவர் ப்ரமதர் எனப்படுவர்.

" மநதாலும் வாக்காலும் கர்மாவினாலும் பக்தர்களைப் புத்திரரைப்போல் ரக்ஷிப்பவர் ப்ரமதர். பிரும்மத்வேஷிகளது ரக்தமாம்ஸங்களைக் கோபத்துடன் சிலப்ரமதர் பக்ஷிப்பார்: (பாரதம்)

பகவான் தான் துஷ்டர்களைச்சிக்ஷித்துச்சிஷ்டர்களை ரக்ஷிப்பதுமாத்ரமல்லாமல் தனது ப்ரமதகணங்களைக்

கொண்டும் லோக நன்மைக்காக இக்காரியத்தைச் செய்கிறார்.

## 71. ஓம் ம்ருத்யுஞ்ஜயாய நம:

### ७१: ओं मृत्युञ्जयाय नमः

பத்தர்கள் மரணத்தைப் போக்குபவர். "நல்ல வாசனை உள்ளவனும் புஷ்டியை விருத்தி செய்பவனுமான முக்கண்ணனைப் பஜிக்கிறோம். வெள்ளேரிக்காய் நன்கு பழுத்தபின் தன் பந்தத்திலிருந்து விடுபடுவதுபோல் அவனருளால் மிருத்யுவினிடமிருந்து நாம் விடுபடுவோம்" என ஓர் வேத மந்த்ரம் கூறுகிறது. இதே மரணத்தைத் தடுக்கவும் இறந்தவரைப் பிழைப்பிக்கவும் பண்டைய காலத்துப் பெரியோர் கையாண்ட "மிருத்யு ஸஞ்ஜிவினீ" என சில புராணங்கள் வர்ணிக்கின்றன.

## 72. ஓம் ஸூக்ஷ்மதநவே நம:

### ७२. ओं सूक्ष्मतनवे नमः

வ்யோமகேசீ ஸ்ரீலலி. ஸ ஹ. 992.

ஸூக்ஷ்மமான சரீரமுள்ளவர். பலர் கண்ணுக்குப் புலப்படாத சரீரமுள்ளவர் என்றும் அணுவில் அணுவாயிருப்பவர் என்றும், பொருள். ஸூக்ஷ்மத்தில் தநு—ஸூக்ஷ்மம், என்பது. "அணோரணீயாந்" என்றச்ருதியின் கருத்தாகும்.

## 73. ஓம் ஜகத்வ்யாபிநே நம:

### ७३- ओं जगद्व्यापिने नमः

உலகமெல்லாம் பரவியிருப்பவர். இந்த நாம அர்த்தத்தினால் சுருதி பிரஸித்தநாமாவாகும். அதர்வசிரஸ் "வாச்யனான சிவனும் வாசகமான பிரணவமும் ஒன்றே என்று விளக்கி எது பிரணவமோ அதுவ்யாபீ. அது அந்தமில்லாதது." என வர்ணிக்கிறது.

முன்நாமாவும் பின்னுமாவும் உபநிஷத்தின் தொடரை அநுசரித்துளது.

## 74. ஓம் ஜகத்குரவே நம:

### ७४. ओं जगद्गुरवे नमः

குருமூர்த்தி: ஸ்ரீ. 602.

உலகிற்கு குரு. உலகபிதாமஹனை பிரும்மாவைப் படைத்து அவருக்கு வேதத்தை உபதேசித்தவர்.

இது தக்ஷிணாமூர்த்தி வடிவான இருபத்தி நான்காவது மஹேசமூர்த்தியைக்குறிக்கின்றது. அந்த சிவாவதாரமானதால் ஸ்ரீமத் ஆதிசங்கரர்க்கும் அவர்பீடத்தில் வருவோர்க்கும் ஜகத்குரு என்ற பட்டம் வழங்குகிறது.

எவர்முதலில் பிரும்மாவைப்படைத்தாரோ எவர் அவருக்கு வேதங்களைத்தந்தாரோ என்ற சுருதியும். "கஷ்டம் கர்பவிபாகம் ஆசயங்கள் இவைகளால் தொடப் படாத புருஷனே ஈச்வரன் அவன் முந்தியவர்களுக் கெல்லாம் குரு. காலத்தினாலவன் வகுக்கப்படாதவன்" என்று பதஞ்சல் யோக ஸூத்ரமும் அவரே ஆதி குரு என்பதை விளக்குகிறது.

## 75. ஓம் வ்யோமகேசாய நம:

### ७५. ओं व्योमकेशाय नमः

வ்யோம கேசி. ஸ்ரீ லலி—ஸ. 902

ஆகாசம் போல் விசாலமான கேசமுள்ளவர். கங்கையைத் தரிப்பதற்காக இவர் கேசத்தை விரித்தார். "பகவான் விச்வரூபமெடுத்த போது அவர் தலைமயிரால் ஆகாசம் வ்யாபிக்கப்பட்டிருந்தது. ஆதலால் வ்யோம கேசர்". (ஈச்வர கீதை.)

கூர்மபுராணத்தில், "தேவகீ புத்ரனாகத்தோன்றிய ஸ்ரீமந்நாராயணன், இந்த உத்தமமான ஈச்வரகீதையை

அர்ஜுனனுக்குத்தானே கூறினார்." என்று காணப் படுவதாலும் ஸ்ரீபகவத்கீதை விச்வரூபாத்யாயத்தில் விச்வரூபத்தை விளக்கும் போதெல்லாம் ஈச்வரபதமே காணப் படுவதாலும் சிவனே விச்வரூபமெடுத்தவர் என்பது ஸ்பஷ்டமாகின்றது. "பச்யமே ரூபமைச்வரம்" "தேரூபமைச்வரம் புருஷோத்தம" (பகவத் கீதை. 11. அத்யாயம்)

விச்வரூபமெடுத்த பரமாத்மாவின் சிரசால் ஆகாசமெல்லாம் வியாபிக்கப்பட்டிருந்ததால் வ்யோமகேசர் என்ற நாம தோன்றியது.

## 76. ஓம் மஹாஸேந ஜநகாய நம:

### ७६. ओं महासेनजनकाय नमः

குஹஜன்மபூ: ஸ்ரீலலி—ஸ. 606.

ஸ்கந்தன் தந்தை. ஸோமாஸ்கந்த மூர்த்தி இருப்பத் தொன்றாவதான மஹேச்வர ரூபமாம். மஹாஸேனை என்பது தேவஸேனையாகும். மஹிமையாவதற்குப்பெருமை அத்தகைய பெருமை வாய்ந்த ஸேனையை உள்ளவன் மஹாஸேநன். அதாவது ஸ்கந்தன் "ஸேநாநீநா மஹம் ஸ்கந்தஃ" ஸேனாபதிகளுக்குள் நான் ஸ்கந்தன் என்று பகவத்கீதையில் கண்ணன் கூறுகிறார். அந்த ஸேனாபதியை உண்டு பண்ணினவர் என்று பொருள். மிகப்பெருமை வாய்ந்த ஸ்கந்தனையே படைத்தவரெனில் இவர் பெருமைக்களவேது?

## 77. ஓம் சாருவிக்ரமாய நம

### ७७. ओं चारुविक्रमाय नमः

அழகான பராக்ரமமுள்ளவர். கடாக்ஷத்தினால் மன்மதனையும், சிரிப்பால் திருபுரத்தையும் எரித்தவர். தனது கால் விரலால் ஓர் கோட்டைப்போட்டு அதை ஸுதர்சனமெனும் சக்கிரமாக்கி ஜாலந்தா வதத்திற்குப் பயன் படுத்திய ஜாலந்தரவதமெனும் பத்தாவது மஹேச்வர மூர்த்தி இதனால் குறிப்பிடப்பட்டது.

ஸ்ருஷ்டி ஸ்திதி லயமாகிய முத்தொழிலையுமே லீலை யாக இவர் நடத்துகிறார். என உபநிஷத்துக்கள் வர்ணிக் கின்றன. அதை இந்த நாம விளக்கிக்காட்டுகிறது. கண்ணைச்சிமிட்டுவது, சிரிப்பது, காலால் கீறுவது இவை கள் எல்லாம் லீலைகள் அல்லவா? மற்றவர் மஹாப்ரயத் தினத்தால் கூட ஸாதிக்க முடியாத கார்யத்தைச் சுலப மாக விளையாட்டால் இவர் முடித்தார்.

## 78. ஓம் ருத்ராய நம:

## ७८. ओं रुद्राय नम:

ருத்ரரூபா. ஸ்ரீல—ஸ. 269.

அழும்படி செய்பவர். உலகத்தை ஒடுக்கும்போது ஜனங்கள் "ஐயோ நாம் அழிகிறோமே" என்று அழு கின்றனர். ஓர் ஸமயமிவர் பிரும்ம புத்திரனாகத்தோன்றி அழுததால் ×ருத்ரன் என்றும் பொருளுண்டு. "ருத்" எனில் துக்கம் அதை அகற்றுவதால் ருத்ரனென மற்று மோர் பொருளுண்டு.

இது வேதப்ரஸித்தநாம. ஸ்ரீருத்ர ஆரம்பத்திலேயே இது அமைந்துள்ளது.

அழும்படி செய்கிறவர் தானே அழுதவர். என்ற இரு அர்த்தங்களும் "ருத். ரோதநே" என்ற தாதுவி லிருந்து தோன்றியவை. ருத் என்பதற்குத் துக்கம் என் றும் அதை "த்ராவயதி" போக்குகிறார். அதாவது, துக் கத்தை அகற்றுகிறார் என்பதும் பொருள். எல்லாதுக்கத்தி லும் சிறந்தது 'ஜநந மரண துக்கம்.' அதை அகற்றுபவர் என்றும் சிலர் பொருள் கூறுவர். அப்பொழுது "ருஜம்" நோயை "த்ராவயதி" போக்குகிறார் என்று பொருள் கூறவேண்டும். "ஆரோக்யம் வேண்டினல் சூரியனை உபாஸி" என்பது தர்மநூலின் உபதேசமாகும். நோயை யகற்றும் சூர்யவடிவன் என்பதும் மிகப்பொருத்தமானதே.

# 79. ஓம் பூதபதயே நம:

## ७९. ओं भूतपतये नमः

பூதங்களுக்குப்பதி. பூதமெனப்படுவது ஓர்வகைத் தேவகணம். அதுப்பிரதிதினம் மாலைவேளைகளில் உலகைப் பீடிக்க ஆரம்பிக்கும். அச்சமயம் சிவன் நடனமாடி அவர்களை அடக்குகிறார். (பார.ஆநு.பர்வா) எவராலும் அடக்க முடியாத பூதகணங்களை ச்மசாநத்தருகே ஒன்று சேர்த்து நடனத்தால் அவர்களை வச்யப்படுத்தி உலகை ஹிம்ஸிக்காதபடி காப்பாற்றுகிறார். இரவிற்குத் தோஷா என்றும், அதற்கு ஆரம்பமான ஸாயங்காலத்திற்கு ப்ரதோஷம் என்றும் பெயர். ப்ரதிதினமும் ப்ரதோஷகாலத்தில் சிவன் லோகஹிதமான நடனம் செய்கிறார். பக்ஷப்ரதோஷமல்லது மஹாப்ர தோஷத்தில் நந்திக்காக நர்த்தனம் செய்கிறார். "பலவகையான ருசியுள்ள ஜனங்களுக்கு ஒருமிக்க ரமிக்கக்கூடியது நர்த்தநம்" என்று காளிதாஸன் கூறியது போல் சிவநடனம் பலரைப் பூதங்களைக்கூட பரவசமாக்குகிறது. ஸகல க்ஷேத்திரங்களிலும் நடராஜமூர்த்தியைக் காணலாம். ஸப்தவிடங்க ஸ்தலங்களில் ஏழுவகையான நடநம் நடைபெறுகிறது.

(1) திருவாரூர். அஜபாநடநம்.
(2) திருநள்ளாறு. உன்மத்த நடநம்.
(3) திருநாகைக்காரோணம். தரங்க நடநம்.
(4) திருக்காறாயில் குக்குட நடநம்.
(5) திருக்கோளிலில் பிருங்க நடநம்.
(6) திருவாய்மூர் கமல நடநம்.
(7) வேதாரண்யம். ஹம்ஸபாத நடனம்.

சம்பு நடனமென்னும் நடநத்திற் கேற்ற சுலோகம் பதஞ்ஜலியாலியற்றப்பட்டது.

## 80. ஓம் ஸ்தாணவே நம:

## ८०. ओं स्थाणवे नमः

அசையா திருப்பவர். திருபுர ஸம்ஹாரத்திற்காக அம்மூவர்களது சேர்க்கையை அசையாமல் நின்று கவனித்ததாலும் ஜ்யோதிர் லிங்கவடிவமாகத்தோன்றிய போது அசைவற்று மூலலிங்கமாக நின்றதாலும் ஸ்தாணு என்றும் பெயர் தோன்றிற்று. ஐந்து ஸாதாக்யமுள்ள ஸதாசிவ வ்யூஹத்தில் இரண்டாவது ஸாதாக்யம் இது.

"ஆதிசக்தியினுடைய பத்தின் ஓர் அம்சத்தால் அமூர்த்தமென்றலிங்கம் தோன்றிற்று. கோடிஸூர்யப்ர காசமான லிங்கத்தினுள்ளே மூர்த்திஅந்தர்கதமாகவுளது. ஆதலால் மூர்த்தாதி எனலிங்கத்திற்குப்பெயர். அது அசைவற்றது" என்ற வாதூலசுத்த வாக்யத்தின்படி லிங்கம் ஸ்தூலமாக நோக்கின் மூர்த்தமாகவும் ஸூக்ஷ்ம மாகநோக்கின் அமூர்த்தமாகவும் அசைவற்றுமிருக்கிறது. கூடஸ்தன் என்றபரமாத்மாவே ஸ்தாணு எனும் பதத் தால் குறிக்கப்படுகிறது.

## 81. ஓம் அஹிர்புத்ன்யாய நம:

## ८१. ओं अहिर्बुध्न्याय नमः

பாதாளத்திலுள்ள சேஷனுயிருப்பவர். விஷ்ணுவின் தாமஸமூர்த்தியான சேஷன் பாதாளத்திலிருக்கிறான். பிர லயகாலத்தில் ஸங்கர்ஷண வடிவனுன ருத்ரன் அதன்முகங் களிலிருந்து ஜகத்தைப் பக்ஷிக்கிறார். (விஷ்ணுபுராணம். இரண்டாவதம்சம்.)

"புத்நஃ" என்றால் மூல மல்லது கால் எனப் பொருள். பாதாளலோகம் பிரும்மாண்டத்திற்கு மூலமாயிருப்பதால் "புத்ந" எனில் பாதாள லோகமென்று பொருள், அங்கு இருப்பவர் என்ற அர்த்தத்தினுல் "புத்ந்யஃ" என்றசொல் உண்டாகிறது. புத்ந்யனுன அஹி என்பதற்குப் பதிலாக

'அஹிர்புத்ந்ய:,' என்று ஆகி இரண்டுபதங்கள் சேர்ந்து ஒரே நாமவானது.

## 82. ஓம் திகம்பராய நம:

## ८२. ओं दिगम्बराय नमः

திக்கையே வஸ்திரமாக உடையவர். தாருகாவனத்தில் முனி ஸ்திரீகளைப் பரீக்ஷிப்பதற்காக இந்த அவஸரமாம்.

இவர்ஒருவரே என்றும் சாச்வத்மாயுள்ள வஸ்து அவரைத்தவிர வேருகத்தோன்று வதெல்லாம் மாயை. உண்மையல்ல, இரண்டாவது ஒருபொருள் ஆணுகவோ பெண்ணுகவோ அவரைத்தவிர வேறிருந்தால் அவர்களிடம் வெட்கம் கொண்டு வஸ்த்ரமணியவேண்டும். வேறு வஸ்து வில்லாததால் அவர் திகம்பரராக யிருக்கிறுர். அன்றியும் ஆடை ஒன்றைமறைக்க உபயோகப்படுகிறது. உலகெலாம் நிறைந்த இவரை எதனுல் மறைப்பது? மறைத்தல் மாயையின்குணம். இவர் மாயாதீதர் என்பதும் பொருளாம்.

## 83. ஓம் அஷ்டமூர்த்தயே நம:

## ८३. ओं अष्टमूर्तये नमः

அஷ்டமூர்தி.லலி. ஸ 662.

எட்டு மூர்த்தியா யுள்ளவர். ஐந்து பூதங்கள் சந்திர சூரியர் ஆத்மா என எட்டு உருவங்களால் உலகை வியாபித்து நிற்பவர். (லிங்க புராணம்) பிருதிவீ முதலிய எட்டுகளின் அபிமானி தேவதையாகஉள்ளவர். என்றும் ஸமஷ்ட்யபிமான தேவதையான "விச்வப்பரர்" எனும் மூர்த்தியாயிருப்பவர் என்பதை இந்த நாம விளக்குகிறது. ஸர்வஜகத்தின் ரூபமாயுள்ள சிவனை அஷ்டமூர்த்தி என்பது "பிராமண பரிவ் ராஜக" நியாயத்தை ஒட்டி சிறப்பித்தலாம். "யாஸ்ருஷ்டி:" எனக் காளிதாஸனும் "தாண்மிம்யீம்" என மூககவியும் இவ் வஷ்ட மூர்த்தியின் பெருமையை விளக்குகிறுர்கள்.

## 84. ஓம் அநேகாத்மநே நம:

### ८४. ओं अनेकात्मने नमः

அநேக ரூபமாயிருப்பவர், என்னென்ன பொருளுக்கு என்னென்ன சக்தி உளதோ அது அது உமையவள். அந்தந்தப்பொருள் மஹேசவரன். (சிவபுராணம்)

இங்குள்ள ஆத்ம சப்தத்திற்கு சரீரமென்று அர்த்தம். "உலகத்தில் உண்டானது உண்டாகிறது உண்டாகப்போகிறது. ஆகிய எல்லாம் இந்தருத்ரனே. அத்தகையவனுக்கு நமஸ்காரம்" என தைத்தரீய சுருதி கூறுகின்றது. அஷ்டமூர்த்திமாத்திரமல்ல அநேகவடிவன் என்று இச்சொற்றொடர் கூறுகிறது.

## 85. ஓம் ஸாத்விகாய நம:

### ८५. ओं सात्विकाय नमः

ஸத்வகுணத்திலிருப்பவர். இவருக்கு மாயாகதமான ஸத்வகுணம் சரீரம். தமோகுண சரீரமானது ஸம்ஹாரத்திற்காக எடுத்துக்கொள்ளப்படுகிறது. (ஸூதஸம்ஹிதை) ஸத்வ குணப்ரவர்த்தகர்என்றும் பொருளுண்டு. ஸத்வ குணம் இவருக்கு அதீநமாயிருக்கிறது என்றும் ஓர்பொருளுண்டு. ஸத்வத்தால் தான் க்ஞாந முண்டாகிறது. ஜ்ஞானத்தால் தான் ஸுகம் உண்டாகிறது. சிவனே ஸுகத்தை அளிப்பவன் என்பதை மிருட, சம்பு, சிவ, சங்கர என்ற சொற்கள் கூறுவது போல் இந்நாமமும் வெளியிடுகிறது.

## 86. ஓம் சுத்த விக்ரஹாய நம:

### ओं शुद्धविग्रहाय नमः

சுத்தமான சரீரமுள்ளவர். "உனக்கு உறங்கும் குணமில்லை. தகாதஇடத்தில் க்ரூர செயலுமில்லை. தமோகுண

மான வேறு தோஷமுமில்லை. ஸத்வகுணத்தின் அம்சமான ஜ்ஞானமும் ஸுகமும் உம்மிடமிருந்தே உண்டாகிறது." என ஜாபால உபநிஷத் கூறுகிறது. ஆதலால் உம்மிடம் தமோகுண சங்கைக்கு ஏது இடம்? (அப். தீக்ஷிதர் பிரும்மதர்க்கஸ்தவம்.)

முன்கூறிய ஸாத்விகமெனும் நாமாவின் பொருளை இது ஆமோதிக்கிறது. தமோகுண விக்ரஹனாயிருந்தால் "நீலக்கிரீவ" கறுத்த கழுத்துள்ளவன் என்ற சொல்தோன்றியிராது. உடலெல்லாம் கறுப்பாயின் கழுத்துமாத்திரம் கறுப்பென பொருந்தாது. தமோகுண கார்யத்தைச் சில ஸமயம்கைக்கொண்டாலும் சிவன் ஸத்வகுணனே என அவரது சுத்தஸ்படிகம் போன்ற உடலும் வெண்மை நிறமுள்ள விபூதியும் வெளுத்த விருஷபமும் வெண்மையானகைலாஸ மலையும் வெண்ணிலாவும் மற்றவைகளும் விளக்குகின்றன. 'ஸாத்விக சுத்தவிக்ரஹ' என்ற சொற்தொடர் அர்த்த புஷ்டியை அளிக்கின்றது.

## 87. ஓம் சாச்வதாய நம:

## ८७. ओं शाश्वताय नमः

சாச்வதீ ஸ்ரீலலி ஸ. 951.

எப்போதுமுள்ளவர். அதர்வசிரஸில் ருத்ரனே தனது ஸ்வரூபத்தை "நான் ஒருவனே முன்னிருந்தேன். இப்போதிருக்கிறேன் இனியுமிருக்கப் போகிறேன். என்னைத்தவிர வேறுவஸ்து கிடையாது" என்றுவிளக்கிக் காட்டுகிறார். ஆதலின் சச்வத் உள்ளவர் சாச்வதர்.

## 88. ஓம் கண்டபரசவே நம:

## ८८. ओं खण्डपरशवे नमः

உடைந்த கோடாலியைஉடையவர். கஜாஸுர யுத்தத்தில் சிவனது பரசு எனும் ஆயுதம்கண்டமானது.

"பரான்ச்ர்ஞுதி" சத்ருவைவதைக்கிறது என்
பொருளில் பரசுஎனும் சொல்தோன்றியது. அஜ்ஞா
வைரியைச் சிக்ஷிக்கவே துறவிகள் கையிலேந்தி
தண்டத்தில் இப்பரசுமுத்திரை தரிக்கப்படுகின்றது
இவரிடம் பரசு பெற்றதால்தான் ஜமதக்கி புதல்வ
இருபத்தோரு தலைமுறை க்ஷத்ரியவதம் செய்ய
சக்தியையும் பரசுராமன் என்ற பெயரையும்பெற்றூர்.

## 89.ஓம் அஜாய நம:

## ८९. ओं अजाय नम:

அஜா ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாம. 866.

பிறப்பில்லாதவர். "நீ பிறப்பில்லாதவன் என்று பிற
பிறப்பைக்கண்டு பயந்த ஒருவன் உன்னைச்ரணடைகிறுன்
ஒருத்ர! உனது தக்ஷிணமுகத்திஞல் என்னைக்காப்பாற்று"
எனச்ருதிகூறுகிறது. கணேசனைப்பிதா மஹனில்லாதவ
என ஓர் கவி கூறுகிருர்.

## 90. ஓம் பாசவிமோசகாய நம:

## ९०. पाशविमोचकाय नम:

பசுபாச விமோசிநீ ஸ்ரீல-ஸ. 354.

பாசத்திலிருந்து விடுவிப்பவர். "பிரும்மா முதல்
ஸ்தாவரம் வரையிலுள்ள அனைவரும் பசுக்கள். இருபத்தி
நான்கு தத்வவடிவமான மாயையே பாசமாம், தன்னை உபா
ஸிக்கும் ஜீவபசுவை ஸம்ஸாரமெனும் மாயபாசத்
திலிருந்து விடுவிப்பவர் பசுபதி"—'லிங்கபுராணம்"

மாயைக்கே பாச மென்று பெயர். மாயைக்கடந்
தாலல்லது ஆநந்தவடிவஞன சிவனை அடைய முடியாது.
மாயை அகல வேண்டுமாயின் மாயையை அடக்கியாளும்
மாயாவியைச் சரணமடைய வேண்டும். "நமஸ்காரம் ப்ர
தக்ஷிணம் முதலியன சாரீரகபக்தியாம். பஞ்சாக்ஷரஜபம்
ஸ்ரீருத்ர பாராயணம் மற்றும் பல சிவஸ்துதிகள் கூறும்
முதலியன வாசிகபக்தியாகும். அவரது உருவை (குணத்

தை) த்யாநம் செய்தல் மாநஸிகபக்தியாகும். இத்தகைத் பக்தியாலல்லது வேறு வகையால் சிவ ப்ரஸாதமடைவது ளிதல்ல. அவனருளின்றிபாசத்தை அகற்றவும் முடியாது சிவ தத்வரஹஸ்யம்)

## 91· ஓம் மிருடாய நம:

## ९१. ओं मृडाय नमः

ம்ருடாநீ. ஸ்ரீலல,ஸ. 564

ஸுகப்படுத்துபவர். இதுவேதப்ரஸித்த நாம. "ம்ருட ஸுகநே" என்ற தாதுவிலிருந்து ஸுகத்தை உண்டு பண்ணுபவன் என்ற சொல் தோன்றிற்று. முன் நாம பாசத்திலிருந்து விடுவிப்பவன் என்றது. இது ஸுகத்தை அளிப்பவன் என்பதால் பாசமறுபட்டாலன்றி பரம ஸுகம் கிட்டாதெனவும் அடுத்தநாம பசுபதி என்பது பசுக்களின் பாசத்தை அறுத்துப் பரிபாலிக்கும் கருணை மூர்த்தி சிவன் என்றும், இந்த சொற்றொடர்ச்சியே உபதே சிக்கிறது.

## 92. ஓம் பசுபதயே நம:

## ९२. ओं पशुपतये नमः

பசுக்களுக்கு பதி " பசுக்களை ஸ்ருஷ்டிப்பதாலும் பரி பாலிப்பதாலும் நான்பசுபதி. (பாரதம்.)

இது வேதப்ரஸித்த நாம. சோழநாட்டிலுள்ள ஆவூர் க்ஷேத்திரத்தில் இந்நாம வழங்குகிறது. பசுபதி கோவில் என ஓர் ஊருமுளது. இது அஷ்டமூர்த்தியில் ஆத்மா திஷ் டாதா வாயுள்ள மூர்த்தியாகும். ஒவ்வோர் ஜிவனிடமும் அவர் அதிஷ்டாதாவாக இருந்தாலும், யக்ஞம் செய்த ஜிவன்விசேஷ மானதால் சிலநூல்களில் யஷ்டாவின் அதிஷ்டாநதேவதை என கூறப்படுகிறது,

## 93. ஓம் தேவாய நம:

## ९३. ओं देवाय नमः

விளையாடுபவர். ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதிரூபமான விளையாட்டைச்செய்பவர். இது வேதப்ரஸித்த நாம தேவனெனில் யஜமானன் என்றும் பொருளுண்டு. நம தேவன் எனில் மனிதர்க்குத்தலைவனான ராஜா என்று பொருள். ஓர் உபபதமும் சேராமல் தேவ எனக் கூறினால் சிவனே அதன் பொருளாவார். மற்றவேதங்களில், இவரை முக்ய தேவனாகக்கொண்ட 'தேவமருதம்' என்ற கர்மா கூறப்பட்டுள்ளது. அதை ஆமோதிக்கும் ஸாமவேதம் ருத்ர என்று கூறவேண்டிய விடங்களில் "தேவ" என்றே கூறு கிறது. ஆதலின் தேவசப்தார்த்த மிவரேயாவர் என்பது ஸ்பஷ்டம்.

## 94. ஓம் மஹாதேவாய நம

## ९४ ओं महादेवाय नमः

மஹாதேவி ஸ்ரீல.209

பெருந்தேவர். ஸர்வ தேவதைகளால் பூஜிக்கப்படுவ தாலும் பிரமாணத்தினால் பெரியவராதலாலும் "மஹ" எனும்தாதுவின் இரு அர்த்தங்களும் பொருந்தியர்வ மஹா தேவர். (ஸாம்ப புராணம்)

அமிருதாம்சமான சந்திரன் தனது அமிருதத்தால் எல் லோரையும் ஸந்தோஷப்படுத்துகிறான். அந்த சந்திரனுக்கு அதிஷ்டான தேவதையாயுள்ளவர் மஹாதேவர். (சிவ புராணம்)

இதுவும் வேத பிரஸித்தமான நாம.

மஹானாயும் தேவனாயுமுள்ளவர். ஏனெனில் முன் கூறிய தேவ சப்தம் இவருக்கே உரியதென்பது திண்ண மாகும். தேவர்களில் உயர்ந்தவர், தேவர்கட்குத்தேவர்,

ான்றும் பொருளுண்டு. ஆனால் தேவசப்தம் மற்றவர் களிடமும் பிரயோகிக்கப்படுகின்றதே என் சங்கை கிகழும்

இவனுக்கே உரிய தேவசப்தம் மற்றவர்களிடம் உபசாரமாகக் கூறப்படுவதால் குற்றமல்ல என கொள்ள வேண்டும்.

## 95. ஓம் அவ்யயாய நம:

## ९५. ओं अव्ययाय नमः

ஜனனுதி மாறுதலில்லாதவர், பிறத்தல் இறத்தல் பிருத்தியாதல் பரிணமமடைதல், குறைதல் அழிதல், என் பன ஜனனுதி ஆறு விகாரங்களாகும்.

ஜ்ஞானம், வைராக்யம், ஐச்வர்யம், தபஸ், ஸத்யம் க்ஷமா, தைர்யம், படைத்தல், ஆத்மஜ்ஞாநம், அதிஷ் டாதாவாயிருத்தல், ஆகிய அவ்யயமான குணமுள்ளவர் ான்றும் பொருளுண்டு. அவர்மாறுதலில்லாததுபோல் வரது குணங்களும் மாறுதலற்றவை எனப் பொருளாம்.

## 96. ஓம் ஹரயே நம:

## ९६. ओं. हरये नमः

பாபங்களை அகற்றுபவர். "எது விஷ்ணுவின் உயர்ந்த ாமாவோ அது சிவ நாமாவாகும்." (ஆச்வலாயன ருஹ்யஸூத்ரம்) ஹரி ஹர என்ற இரு சொற்களும் ஹ்ருஞ்ஹரணே " என்ற தாதுவிலிருந்தே தோன்றின ன்றாலும் ஹரி எனில் விஷ்ணு. ஹரன் எனில் சிவனென் ம் பிரஸித்தமானது. விஷ்ணுவர்வுமிருப்பவர் ஹரனே. தலால் ஹரி என்றுமிவர் அழைக்கப்படுகிறார். இது ராணப்ரஸித்த நாம.

## 97. ஓம் பூஷதந்தபிதே நம:

## ९७. ओं पूषदन्त भिदे नमः

பூஷாவின் பல்லை உடைத்தவர். தக்ஷனத வேள்வியில் பூஷாவின் பல்வரிசையையும் மூக்தாஹாரத் தையும் வீரபத்ரன் வில் நுனியால் பேதித்தார். அதனால் பூஷா அஸ்பஷ்டமாகப் பேசுகிறவரானார். (சிவபுராணம்)

சிவநிந்தை செய்தபோது அதைக்கேட்டுப் பல்லிளித் துச் சிறித்த பூஷாவைச் சிக்ஷித்தால் பரநிந்தையில் எவரும் ஈடுபடார் என்று துஷ்ட சிக்ஷைக்கும் சிஷ்ட ரக்ஷைக்காக வும் இங்ஙனம் செய்தார். இது புராணப்ரஸித்த நாம.

## 98. ஓம் அவ்யக்ராய நம:

## ९८. ओं अव्यग्राय नमः

கலங்காதவர். சிவத்ரோஹிகளுக்குத் தக்க தண் டனை விதிக்கக் க்ரூரமான காரியஞ் செய்தாலும் கோபத் தால் இவர் மனங் கலங்காதவர். (சிவ-ந. ரஹஸ்யம்)

கோபத்தினாலோ பயத்தினாலோ அவர் மனம் கலங்க வில்லை. பூஷன் பல்லை, தக்ஷன் யாகத்தை, பகனின் கண்ணை, அழித்தவர் என்று அடுத்துவரும் நாமாக்களி னாலே இவர் க்ரூரகுணம் வாய்ந்தவரோ என எவருக்கும் சங்கை வரக்கூடாது என்பதற்காக, மனதில் கலக்கம் ஒன்றுமில்லை. துஷ்ட கார்யத்திற்காகச் சிக்ஷைசெய்தார் எனக்காட்டவே இடையில் அவ்யக்ர எனும் இச்சொல் அமைந்தது.

## 99. ஓம் தக்ஷாத்வரஹராய நம:

## ९९. ओं दक्षाध्वरहराय नमः

தக்ஷயக்ஞவிநாசிநீ ஸ்ரீலலி-ஸ. 600.

தக்ஷன் யாகத்தை அழித்தவர். தக்ஷன் யாகத்தைக் கூறாத புராணமேயில்லை எனலாம்.

தவரான வழியிற்சென்ற தக்ஷனையும் அவன் யாகத்தையும் அழித்து விவேகம் வந்தபின் தக்ஷன் இவரைப போற்ற, யாகத்தைப் பூர்த்தி செய்வித்து இவனையும் ஆசிர்வதித்தார் என்பது தடுத்து ஆட்கொள்ளும் இவரது பெருந்தன்மையை விளக்குகின்றது—இது புராணப்ரஸித்த நாம.

## 100. ஓம் ஹராய நம:

## १००. ओं हराय नमः

உபஸம்ஹாரம் செய்பவர். (சுருக்குபவர்) ஸ்ருஷ்டிக்கும் மூர்த்தி பவர், பரிபாலிப்பவர் மிருடர், சுருக்குபவர் ஹரர், இது புராணபிரஸித்த நாம. மிக உயர்ந்ததெனக் கொண்டாடப்படுவது. "எட்டுமுறை ஹர என்று ஜலத்தில் மூழ்கி ஜபிப்பவர் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுவர். (சிவபுராணம்) "ஆஹர' ப்ரஹர" கொண்டுவா (அவனை) அடி, என்று கூறிக்கொண்டே இறந்த திருடன்கூட ஹரசப்த உச்சாரணத்தால் கைலாஸஞ் சென்றான். (சிவபுராணம்)

பாபத்தை மாத்ரம் ஹரிப்பவரல்ல. பாபத்திற்கெல்லாம் மூலகாரணமாயுள்ள அஜ்ஞானத்தையே ஹரிப்பவர். ஆதலின் இல்லறத்தாராலும் துறவிகளாலும் ஸதா கூறத்தக்க மிக உயர்ந்த பவித்ர நாம இது. ஆதலாற்றான் "ஹர ஹர மஹாதேவ" என நாமாவளி கூறப்படுகிறது.

## 101. ஓம் பகநேத்ரபிதே நம:

## १०१. ओं भगनेत्रभिदे नमः

பகதேவரின் கண்ணைப்பிடுங்கியவர். ஸகல இந்திரியங்களையும் புண்யகர்மாவில் ஈடுபடுத்தல்வேண்டும். அதர்மமான தக்ஷயஜ்ஞத்தி லீடுபட்டதுமல்லாமல் தக்ஷனைச் சிக்ஷிக்கும் வீரபத்ரனை க்ரூர கண்ணால் உற்று நோக்கிய பகன் கண்ணை அபஹரித்தார். புராணப்ரஸித்தநாம இது.

## 102. ஓம் அவ்யக்தாய நம:

## १०२. ओं अव्यक्ताय नमः

அவ்யக்தா ஸ்ரீலலி- ஸ, 398

ஸ்பஷ்டமாக தெரியாதவர். " அவருடைய உருவ கண்ணின் முன் நிற்பதில்லை. ஊனக்கண்ணால் எவரு அவரைப் பார்க்கவில்லை. அவர் வாக்கிற்கும் மனதிற்கு எட்டாதவர். (தைத்தரீய ச்ருதி.)

அஷ்டமூர்த்தி. அநேகாத்மா, சுத்த விக்ரஹ, மிரு பாணி இது முதலிய நாமாக்கள் அவரது உடல் வ்யக் மாகப் பார்க்கக்கூடியதென வர்ணிக்கின்றன. இது அ யக்தமென்கின்றது. இவை பரஸ்பர விருத்தம்போல் காணப்படினும், நிர்குணனாக உள்ளபோது கண்ணுக்கு புலனாகாதவன் என்றும், ஸகுணனாக உள்ளபோது பாபி கள் கண்ணுக்குப் புலனாகாதவன் என்றும், பொருள் கொண்டால் பரஸ்பர விரோதமாக நாமாக்களிருப்பவை களாகத் தோன்றாது. ச்ருதிப்ரஸித்த நாம இது.

## 103. ஓம் ஸஹஸ்ராக்ஷாய நம:

## १०३. ओं सहस्राक्षाय नमः

ஸஹஸ்ராக்ஷி. ஸ்ரீலலி- ஸ 282

ஆயிரக்கணக்கான கண்களுள்ளவர் " எங்கும் கண் ளுள்ளவர், எங்கும் முகமுள்ளவர். உலகிலுள்ள பிராணி களின் ஹ்ருதய குஹையில் அவரிருப்பதால் எல்லோர் கண்களும் அவர் கண்ணே." (தைத்தரீய சுருதி.) இது ச்ருதி பிரஸித்த நாம.

நூறு ஆயிரம் ஆகிய சொற்கள் கணக்கில்லாதவை என்ற பொருளையுங் கொடுக்கும். ஆதலின் " எங்கும் கண் எங்கும் முகம் எங்கும் கை எங்கும் கால் உள்ளவன் " என்ற சுருதியும் " ஆயிரம் தலை உள்ள புருஷன் ஆயிர

ண்ணுள்ளவன் ஆயிரம் காலுள்ளவன்" என்ற சுருதி
ம் இவர் பெருமையைக் கூறுகின்றன.

## 104. ஓம் ஸஹஸ்ரபாதே நம:

१०४. ओं सहस्रपादे नमः

" ஸஹஸ்ரபாத் ஸ்ரீல-ஸ." 283.

ஆயிரக்கணக்கான கால்களுள்ளவர். ஆயிரம் கண்
னக் கூறியவுடன் ஆயிரங் காலுள்ளவன் என்ற நாமா
றப்பட்டது. இவைபெரும்பாலும் சுருதியிலிருந்தே
டுக்கப்பட்டவை என எண்பிக்கின்றது. ஸஹஸ்ராக்ஷன்
ஹஸ்ர பாதன் என்பது சுருதி.

## 105. ஓம் அபவர்கப்ரதாய நம:

२०५. ओं अपवर्गप्रदाय नमः

கைவல்யபததாயி ஸ்ரீலலி.ஸ 625.

மோக்ஷத்தை அளிப்பவர்.
பரமாத்மா ஒருவனை என்ற வாஸனை உண்டாகவேண்டு
ானுல் கூட சிவனருள் வேண்டு" மென தர்ம நூல்கள் கூறு
ன்றன. அப்படியிருக்கப் பேரானந்தமெனும் மோக்ஷத்தை
ளிப்பவர் வேறு யார்?. " ஆகாசத்தைதோல் போல்
நட்ட சக்தி பெற்றாலும் சிவனை நன்கு அறியாமல்
க்ஷத்தைப் பெறமுடியாது" (சிவபுராணம்)

## 106. ஓம் அநந்தாய நம:

१०६. ओं अनन्ताय नमः

முடிவில்லாதவர். இது சுருதிப்ரஸித்தநாம. வஸ்து
லம் தேசம் இவை மூன்றுமே ஒரு பொருளின்
ன்மையைப் பிரித்துக் கூறுகின்றன. இம்மூன்றையுங்
டந்து வ்யவஹாரதசையில் மூன்றாகவுமிருக்கும் சிவ
க்கு அந்தமெனும் முடிவேது? இவரளிக்கும் மோக்ஷம்,

புண்யமானவுடன் பூமிக்கேதிருப்பி அனுப்பும் ஸாலோக்யாதிகளல்ல. என முன்நாமாவிற்கு அடுத்துக் கூறப்பட்ட இந்நாம காட்டுகிறது.

## 107. ஓம் தாரகாய நம:

## १०७. ओं तारकाय नमः

ஸம்ஸாரத்திலிருந்து தாண்டிவைப்பர். காசியில் இறப்பவருக்குத் "தார" மெனும் பிரணவத்தை உபதேசிப்பதால் "தார" என்று இந்நாம ஸ்ரீருத்திரத்தினுல் வர்ணிக்கப்படுகிறது. இது ச்ருதிப்ரஸித்த நாம "உச்சரிக்கும்போது ஜநன மரணதுக்கத்திலிருந்து நம்மைத்தாண்ட வைப்பதால் பிரணவத்திற்குத் "தார" என்றுபெயர். (அதர்வசிரஸ்) துக்கத்திலிருந்து பக்தனைத்தாண்டவைத்து அநந்தஸுகத்தை அளிப்பவன்என்று கருத்து.

## 108. ஓம் பரமேச்வராய நம:

## १०८ ओं परमेश्वराय नमः

பரமேச்வரீ ஸ்ரீல 396.

மிகச்சிறந்தவரான ஈச்வரன். எல்லா கர்மபலனையும் அளிக்கும் ஸ்வாதந்தர்யமே சிறப்புக்குக் காரணம். இப்பதத்தைப் பூர்த்தியில் வைத்ததினுல் நாம் செய்யும் ஸ்துதி யுக்தமாயினும் அயுக்தமாயினும் பகவான் ஸ்வதந்திரனுனதால் பலனைக்கொடுப்பாரென விளங்குகிறது: சிவ எனும் மங்களமான நாமாவை ஆரம்பித்து பரமேச்வர எனும் சிறந்த நாமாவுடன் பூர்த்திசெய்வதால், அவ்விரண்டிற்கும் நடுவிலுள்ள மற்ற நாமாக்களும் இங்ஙனமே மிகமிகச் சிறந்தவை என்பது நிச்சயம். புராணப்ரஸித்த நாம இது.

"தேவர்கள் என்னையே பரமேச்வரன் என்று துதிக்கிருர்கள். முநிவர்கள் அக்நிமூலமாக உபாஸிக்கிருர்கள். நான் எல்லா தேவர்களது உடலையும் ஏந்தி அவரவர் உள்ளே பரமாத்மாக விருப்தால் இதரதேவதைகளைப் பூஜித்

நாலும் நானே பூஜிக்கப்பட்டு அவர்களையும் விடுவிக்கிறேன். என்னையே ஆச்ரயித்தவன் பரமபதம் பெறுவான்" (ஈச்வரகீதை.)

एवं श्रीशंभुदेवस्य नाम्नामष्टोत्तरं शतम्

**ஏவம் ஸ்ரீசம்பு தேவஸ்ய நாம்நா மஷ்டோத்தரம் சதம்**

एतदष्टोत्तरं नाम्नां शतमाम्नाय संमितं ।
शंकरस्य प्रिया गौरी जप्त्वा शंभुप्रसाददं ॥

ஏதத்ஷ்டோத்தரம் நாம்ணும் சதமாம்ணய சம்மிதம்
சங்கரஸ்ய ப்ரியாகௌரீ ஜப்த்வாசம்பு ப்ரஸாததம்.

இந்த 108 நாம வேதத்திற்கு ஸமமானது. சிவப்ரஸாதத்தை அளிப்பதான (இதை) சங்கரனுக்கு பிரியமனைவியான கௌரீ ஜபித்து.

त्रैकाल्य मन्वहं देवी वर्षमेकं प्रयत्नतः ।
अवाप सा शरीरार्धं प्रसादात् शूलपाणिनः ॥

த்ரைகால்ய மன் வேஹம் தேவீவர்ஷ மேகம் ப்ரயத்நத:
அவாபஸா சரீரார்த்தம் ப்ரஸாதாத் சூலபாணின:

அந்த தேவீ ப்ரயத்நத்துடன் ஓராண்டு தினந்தோறும் மூன்று வேளைகளிலும் (அதை ஜபித்து) சூலபாணியின் ப்ரஸாதத்தால் பாதி சரீரத்தைப் பெற்றாள்.

यस्त्रिसन्ध्यं पठेन्नित्यं नाम्नामष्टोत्तरं शतं ।
शतरुद्रत्रिरावृत्या यत्फलं लभतेनरः ॥

யஸ்திரி ஸந்த்யம் படேந்நித்யம் நாம்ணு மஷ்டோத்தரம் [சதம்
சதருத்ரதிராவ்ருத்ய யத்பலம் லபதே நர:

யார் இவ்வஷ்டோத்தர சதநாமாவை நித்யம் மூன்று காலத்திலும் படிக்கிறானோ அந்த மனிதன் மும்முறை ஸ்ரீ

ருத்ர பாராயணத்தால் எந்த பலன் உண்டாகுமோ அதை அடைவான்.

तत्फलं प्राप्नुयान्नित्यं एकावृत्या नसंशयः ।
सकृद्वा नामभिः पूज्य कुलकोटिं समुध्द्रेत् ॥

தத்பலம் ப்ராப்னுயாந்நித்யம் ஏகாவ்ருத்ய நசம்சய:
ஸக்ருத்வா நாமத: பூஜ்ய குலகோடிம் சமுத்தரேத்.

அந்த பலத்தை (மும்முறை ஸ்ரீருத்ர பாராயணத்தா லுண்டாகும் பலத்தை) நித்யம் ஒருமுறை சிவநாம அஷ்டோத்தரத்தை ஜபிப்பதால் அடைகிறான். ஒருமுறை இன் நாமாக்களால் பூஜை செய்தால் கோடிகுலம் க்ஷேமத்தை அடையும். அதில் சந்தேகமில்லை.

विल्वपत्रैः प्रशस्तैश्च पुष्पैश्चतुलसीदलैः ।
तिलाक्षतैर्यजेत् यस्तु जीवन्मुक्तो नसंशयः ॥

பில்வ பத்ரை: ப்ரசஸ்தைச்சபுஷ்ப்பைச்சதுலசீதலை:
திலாக்ஷதைர்யஜேத் யஸ்து ஜீவன்முக்தோ நசம்சய:

சிறந்த வில்வ பத்ரங்களாலோ, புஷ்பங்களாலோ துளஸீ தளங்களாலோ திலத்தினலோ அக்ஷதையாலோ எவன் அர்ச்சிக்கிறனே அவன் ஜீவன் முக்தன். அதில் ஸந்தேகமில்லை.

இந்த ஸ்துதியைக் கேட்டவள் ஸ்ரீ பார்வதீ தேவி. உபதேசித்தவர் ஸ்ரீ நாராயணன், இதனல் போற்றப்படுபவர் ஸ்ரீ மஹாதேவன். பயனே சிவனது பாதி சரீரப்ராப்தியாம். அத்தகைய சிவநாமாஷ்டோத்தர சதத்தை வாயால் உறக்கக்கூறுவதை விட மெதுவாகக் உச்சரிப்பது கோடி மடங்கு பயனைத்தரும். மனதால் ஜபிப்பது அதைவிட சிறந்தது. அதைவிட நாமாவைக்கூறி அர்ச்சிப்பது சிறந்தது. அதைவிட நாமாவின் அர்த்தத்தை த்யானம் செய்வது மிகமிகச் சிறந்தது. அதைவிட அந்த ஸ்ரூபத்தில் லயிப்பது மிகமிகச் சிறந்ததாம்.

## ஸ்ரீ பாஸ்கர ராயரது

## சிவநாம கல்பலதா

ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர்வாள் இயற்றிய ஸ்ரீசிவநாம அஷ்டோத்தர சதவ்யாக்யானத்தைத் தழுவி தமிழுரை எழுதியபின், அக்நிசித்பாஸ்கர ராயரவர்கள் இயற்றிய வ்யாக்யாந நூல் கிடைத்தது. அது 1912 ஆண்டு பம்பாயில் அச்சிடப்பட்டதாகும்.

அதில் அக்நிசித் என்ற அடைமொழி காணப்படுகிறது. அது கருடசயநம் என்ற வைதிகயக்ஞத்தைச் செய்தவர் என எண்பிக்கின்றது. காலையில் எழுந்தவுடன் தர்சிக்க வேண்டிய புண்ய வஸ்துக்களில் "अग्निचित् कपिलासती" 'அக்நிசித் கபிலா ஸத்ரீ' அக்நிசயநம்செய்தவரை முதலிலே தர்மசாஸ்த்ரம் கூறுகிறது. அக்நிசித் மஹா புண்ய சாலியாவர்.

ஸ்ரீ பாஸ்கரராயர் கேவல சக்த்யுபாஸகர் மட்டுமல்ல. சிறந்த வேதாந்தி. உயர்ந்த கர்மடர். உத்தமகவி. ஒப்புயர்வற்ற வ்யாக்யாதா. பரந்த அனுபவி என தெரிகிறது.

108 சிவநாமாக்கள் உபாஸகருக்கு விரும்பும்விருப்பை விரைவிலளிக்க வல்லன என்ற கருத்து கொண்டேதான் சிவநாம கல்பலதா என்றும் அவைகளுக்கு எழுதிய உரைக்கு 'கல்பலதா ஆலவாலம் எனவும் பெயரிட்டார். அதற்கு ஆலவாலத்திற்கு ஸுதாபூரம் என்று ஓர் உரை ஸ்ரீவேங்கடாசலர் எனும் பண்டிதரால் இயற்றப்பட்டுளது. ஸ்காந்தத்தில் தோன்றிய சிவநாம கல்பவல்லிக்கு பாஸ்கர ராயர், ரத்நாலவாலம் ரத்நத்தினால் கட்டப்பட்ட பாத்தி என்ற பெயருடன் வியாக்யானம் இயற்றினார்: அதற்கு அமிருதப்ரவாஹம் என்ற பொருளுள்ள ஸ்ரீவெங்கடேசர் உரை மிக அழகாக அமைந்துளது.

அமிருதப்ரவாஹம் பாய்ந்த ரத்ந பாத்தியில் வளர்ந்த கல்பவல்லி யாருக்குத்தான் இன்பத்தை விளைவிக்காது?

116 பத்யங்களைக் கொண்டே ஸ்ரீபாஸ்கரனால் சுலோக ரூபமான உரை அமைக்கப்பட்டது ஒரு கொடிக்குப் பாத்தி அவச்யம் என்பதனால் மட்டும் தன் உரைக்கு ஆலவாலம் எனப்பெயரிட்டதில்லை. சுலோகம் விருத்த பந்தத்துடன் கூடியது. இது பத்ய ரூபமான உரை ஆதலின் இப்பெயரிட்டார் போலும். 116. விருத்தங்களிலும் நாலைந்து விருத்தங்கள் தான் இருமுறை கூறப்பட்டிருக்கின்றன. மற்றவை தனித்தனி அபூர்வமான விருத்தங்களிலே கூறப்பட்டிருக்கின்றன. அதிலும் அந்தந்த பகவந் நாமாக்களின் பெயரே விருத்தத்திற்கு அமைந்த விருத்தத்தில் உரை கூறியது; அந்தந்த ராகத்தின்பெயரை கீர்த்தனங்களில் சேர்த்து அமைப்பதுபோல் கவிகளின் உள்ளத்தைக் கொள்ளைக் கொள்கிறது. உதாரணமாக த்ரயீமூர்த்தி என்ற நமாவுக்கு த்ரயீ விருத்த உரை. ஸர்வக்ஞ நாமாவுக்கு ஸர்வக்ஞ விருத்தம். ஸோமஸூர்யாக்நிலோசந என்பதற்கு லோசந விருத்தம்.' அநக என்பதற்கு அநக விருத்தம். மிருத்யுஞ்ஜய நாமாவிற்கு மிருத்யுஞ்ஜய விருத்தம், மஹாஸேநஜநக என்பதற்கு மஹாஸேந விருத்தம் எனமற்றும்பல அமைந்தது; ஸாஹித்யத்திலும் கவிதையிலும் இவருக்குள்ள அஸிதர ஸாதாரணமான அறிவைக் காட்டுகிறது.

பற்பல காவ்யங்களில் காணப்படாததும் விருத்த லக்ஷண சாஸ்திரங்களிலே மாத்திரம் கூறப்பட்டதுமான மிக அபூர்வமாயுள்ள விருத்தங்களில் பத்யமமைப்பது துர்லபம். விருத்தநாம அந்தந்த விருத்தங்களில் அமைக்கப் பட்டதைக் காணலாம். சிவநமாவுக்கேற்ற விருத்தத்தைத் தேடி அதில் சுலோக ரூபமான உரை கூறுவது ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரராய் ஸரஸ்வதியின் ஆணுருவாய் அமைந்தவர்க்கே இயலும்.

ஸ்ரீ நீலகண்ட தீக்ஷதர்வாள் இயற்றிய சிவதத்வரஹஸ்ய மெனும் சிவநாமாஷ்டோத்தரசதத்தின் வசந நடையான உரையைத்தழுவியே ஸ்ரீபாஸ்கரராயரின் வியாக்யாநம் அமைந்துள்ளது. பெரும்பாலும் இவ்விருவ் வ்யாக்யானங்

களும் ஒன்றாகவே இருக்கின்றன. ஸ்ரீ பாஸ்கரர் உரைக்கு உரை எழுதியவர் பெயரைக்குறிக்காமல் ஓர் வ்யாக்யாதா இப்படி கூறுகிறார் என்றுரைக்கிறார். அது ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்வாளைக் குறிப்பது போலாம். தீக்ஷிதரவாளது காலத்திற்குப்பின் சுமார் 100 ஆண்டுகளுக்குப் பின்னர் ஸ்ரீ பாஸ்கரர் காலமெனக் கூறுவர்.

ஸ்ரீ பாஸ்கரரது உரையில், தீக்ஷிதர் உரையில் காணப்படாத விசேஷார்த்தங்கள் எங்குளதோ நாமஸங்க்யைக் கொடுத்து அதை மாத்ரம் (41) மேலே வெளியிட்டிருக்கிறோம். வடநாட்டிலேயே வெகுகாலமிருந்த பாஸ்கரர் சிவபுராணத்தில் கூறப்பட்டுள்ளதும் வடநாட்டிலே உள்ளதுமான 68 முக்ய க்ஷேத்ரங்களில் வழங்கும் நாமாக்களை ஆங்காங்கு குறிப்பிடுகிறார்.

அவதாரிகையாக இவர் எழுதிய 6 பத்யங்களில் 2 வது பத்யம் மிக ரஸமானதும் குலசேகராவார் எழுதிய முகுந்தமாலையிலுள்ள வாத்ஸல்யாத் என்றதை ஒத்திருப்பதாலும் அதைக்குறிப்பது போலிருப்பதாலும், வெளியிடுவாம். அவ்விருபத்யங்களையும்,

आलन्त्यौदार्य सत्यादतिमृतिहृतिभिः स्वल्पसेवातितोषात्
संकष्टोच्छित्युपेक्षाभयहितवचनै रुत्तमत्वाच्च शंभुः ।
सेव्योविष्णूपमन्युद्रुहिणमुनिसुत श्रीदमन्थेच्छुदेवैः
दक्षश्रीरामवेदैरशिशुपशुवधूराक्षसैः साक्षिभिर्नः ॥

அநந்தகுணமளித்தல் உதாரத்தன்மை ஸத்யத்தில் ஆதரவு மரணத்தை அகற்றல், ஸ்வல்பஸேவையால் களித்தல், கஷ்டத்தைநீக்கல் உபேக்ஷை அபயமளித்தல் ஹிதமானவசநமிவைகளால் சிவனேஸேவிக்கத்தக்கவன் குழந்தையும் மிருகமும் பெண்ணும் ராக்ஷஸனுமல்லாத விஷ்ணு, உபமன்யு, பிரும்மா, மார்க்கண்டேயன், குபேரன், அமிருதங்கடைந்த தேவர், தக்ஷன், ஸ்ரீராமர், வேதங்கள், ஆகிய இவர்கள் ஸாக்ஷிகள். (முகுந்தமாலா சுலோகம்.) 17

वात्सल्या दभयप्रदानकरणादार्तार्तिनिर्वापणात्
औदार्यादघशोषणादगणितश्रेयः पदप्रापणात् ।
सेव्यः श्रीपतिरेक एव जगतामेतेचषट् साक्षिणः ।
प्रह्लादश्च विभीषणश्च करिराट्पांचाल्यहल्याध्रुवः ॥

அன்பு அபயமளித்தல் துக்கமகற்றல் பெருந்தன்மை பாபத்தை அகற்றல் அளவற்ற சிரேயஸ்ஸை அளித்தல், இக்காரணங்களால் ஸ்ரீபதியே உலகில் ஸேவிக்கத்தக்கவர். ப்ரஹ்லாதன் விபீஷணன் கஜேந்த்ரன் பாஞ்சாலி அகஹல்யை த்ருவன, இவ்வாறு பேர் ஸாக்ஷிகள்.

1. 6. ஹேமகூட சைவ சிகரத்தில் விருபாக்ஷச்வரர் என்றுப் ப்ரசித்தமானவர். இந்த க்ஷேத்ரம் பத்மபுராணத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

2. 10. சம்—மங்களத்தை கர—கையில் வைத்திருப்பவர்சந்தரபுரமெனும் க்ஷேத்திரத்தில் சங்கரேசுவரர் எனப்ரசித்தமானவர்.

3. 11. த்ருப்தபுர க்ஷேத்திரத்தில் ப்ரசித்தமானவர்.

4. 15. தேவிகா க்ஷேத்திரத்தில் ப்ரசித்தநாம அம்பிகா நாதா என.

5. 16. ஸ்ரீ-காலகூடவிஷம் கங்கை—சந்த்ரன் ஆகிய மூன்றையும் உடையவர் மாண்ட்ல்ய க்ஷேத்ரத்தில் இந்த நாம ப்ரசித்தமானது.

6. 17. பக்தர்களை வத்ஸ—மார்பில் வைத்துக் காப்பவர்.

7. 19. மத்யதேச க்ஷேத்திரத்தில் சர்வேச்வரர் என்று ப்ரஸித்தமான பெயருள்ளவர்.

8. 21. காலஞ்ஜரகிரி எனும் க்ஷேத்திரத்தில் கண்டேச்வரர் என்று பெயர் பெற்றவர்.

9. 24. கபாலீச்வரர் என காவீர க்ஷேத்திரத்தில் அழைக்கப்படுபவர்.

10. 30. ஜலந்தரன் முதலிய தேவகண்டர்களான அஸுரர்களுக்கு கூடஸாலோக்யம் முதலிய முக்தியை யளிப்பவர்.

11. 31. பீமேச்வரர் என்று ஸப்தகோதாவர க்ஷேத்திரத்தில் அழைக்கப்படுபவர்.

12. 38. த்ரிபுராந்த கேசவரர் என்று ஸ்ரீசைல க்ஷேத்திரத்தில் கூறப்படுபவர். மல்லிகார்ஜுநேச்வரர் என்று அங்கு அழைக்கப்பட்டாலும் அறுபத்தெட்டு முக்ய சிவக்ஷேத்திரங்களைக் கூறுமிடத்தில் இப்பெயரே வழங்கப்படுகிறது.

13. 39. வ்ருஷசைல க்ஷேத்திரத்தில் ப்ரசித்தமானவர்.

14. 40. விருஷ எனில் தர்மம் செய்ய ஸாதநமாண ஐச்வாயமும் தர்மமும் பொருள். பா எனில் வைராக்யமும் அதனாலுண்டாகும் ஞாநமும் பொருள். ஆதலின் ஐச்வர்யம் தர்மம் வைராக்யம் ஞானம் இவைகள் மீதிருப்பவர் என்று பொருளாகும்.

15. 41. பூதேச தீர்த்தமெனும் க்ஷேத்திரத்தில் பஸ்மோத்தூளித விக்ரஹேச்வரர் என ப்ரஸித்தர்

16. 43. தலையிலிருந்து கழுத்து வரைக்கும் ருக் வேதமாகவும் நாபிவரை யஜுர்வேதமாகவும் பாதம் வரை ஸாமவேதமாகவும் இருக்கிறீர்.

17. 49. பாலில் நெய் இருப்பது போல் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் நீர் இருந்தாலும் மனதினால் கடைபவர்களுக்கே கிடைக்கின்றீர்.

18. 50. வேதமே பாதம். யூபம்பல். அக்நிநாக்கு, முகம் சயநம், ரோமம் தர்மம், மூக்கு ஸ்ருவம், நாஸிகேந்திரியம் நெய். பகல் இரவு கண்கள் கை ஸவநங்கள். ஔத்காத்ரம் நரம்புகள். தோள்வேதி. சரணங்கள் உபநிஷத் ஜடைகள். ப்ரவர்க்யங்கள். மார்பே தக்ஷிணை. இடுப்பின் பாகங்கள் மந்த்ரங்கள், இங்ஙனம் யக்ஞாங்கங்களையே உடலாக உடையவர்.

19. 51. ஸௌராஷ்ட்ர க்ஷேத்ரத்தில் ஸோமேசர் என விளங்குகிறீர்.

20. 54. காசி எனில் சின்மயமான ஜ்யோதி, அந்த காசியினால் விச்வமெனும் உலகில் வியாபித்திருப்பதாலும், காசி க்ஷேத்திரத்தில் பரசித்தமானதாலும் விச்வேச்வரர் என அழைக்கப் படுகிறீர்.

21. 55. கைலாஸ த்வாரபாலனான வீரனும் சிவகோபத்தால் உண்டான பத்ரனும் உம்மிடமிருப்பதால் நீர் வீரபத்ரர். தக்ஷயாகத்தை அழிக்கச் சிவனால் படைக்கப்பட்ட வீரனும் தேவியால் படைக்கப்பட்ட பத்ரையுமிருப்பதால் வீரபத்ரர் ராஜபரமெனும் க்ஷேத்திரத்தில் இப் பெயர் ப்ரசித்தமாம்.

22. 56. ஒன்று இரண்டு முதலிய கணங்களுக்கு நாதன். கைலாஸ க்ஷேத்திரத்தில் இப்பெயரால் அழைக்கப்படுவர்.

23. 60. கிரி=வைதிக வாக்கியத்தில் ஈச=ஸமர்த்தன் அதாவது வேதத்தால் ஈசன் என கொண்டாடப்படுவபர்.

24. 65. கிரி வாக்விஷயத்தில் தர்வா பாலேவநமாயிருக்கிறீர், அதாவது வாக்கிற்கு எட்டாதவர் என பொருள்.

25. 66. கிரி வேதவாக்கில் அதிகப்பிரியமுள்ளவர். மலே எனப்பொருள் தரும் சொல் கிரி என்பது இகாராந்தம். சொல் எனப் பொருள் தருவது ரேபாந்தமான கீ என்பதாம்.

26. 67. ஏகாம்ரக்ஷேத்திரத்தில் கிருத்திவாஸே சவரர் என அழைக்கப்படுபவர்.

27. 68. புரா முதலில் ராதிப்ரகாசிக்கிறீர். அதாவது நீரே முதலில் ப்ரகாசரூபியாயிருப்பவர். உமது ஒளியைப்பின்பற்றியே மற்றவை ப்ரகாசிக்கின்றன.

28. 72. ஆம்ராதக க்ஷேத்திரத்தில், ப்ரசித்த மான பெயருள்ளவர்.

29. 75. பஞ்சபூதங்களில் சிறந்தது ஆகாசம் அந்த வ்யோமக—ஆகாசத்திற்கும் ஈசன்.

30. 83. பிருதிவீரூபமானவர் சர்வர். ஜலரூபிபவர். தேஜோரூபிருத்ரர் வாயுரூபி உக்ரர் ஆகாச ரூபி பீமர் ஸூர்யரூபி ஈசாநர் சந்த்ரரூபி மஹாதேவர். தீக்ஷிதரூபி பசுபதி.

31. 85. ஸத்வா:—(பிராணிகள்) இவரிடத்தில் வசிக்கின்றன என்பதால் ஸாத்விகர். அதாவது ஸகல ப்ராணிகளுக்கும் இருப்பிடமானவர்.

32. 86. இவரை உபாஸிப்பவரது உடல் சுத்தமாகின்றது. கபடமின்றி ருஜுவாக யுத்தம் செய்கிறபடியால் சுத்தவிக்ரஹர்.

33. 92. நேபாள க்ஷேத்திரத்தில் பசுபதீச்வரர் என அழைக்கப்படுபவர்.

34. 96. ஹரிச்சந்த்ர க்ஷேத்திரத்தில் ஹரீச்வரர் என ப்ரசித்தமானவர்.

35. 98. ராவணன் கைலாஸத்தை அசைத்தபோதும் பிரும்மாண்டங்களை ப்ரளய காலத்தில் எரிக்கும்போதும் மற்ற யுத்தங்களிலும் கலக்கமின்றி ஸந்தோஷமாக தேவியின் முகத்தைப் பார்த்திருப்பவர்.

36. 99. தக்ஷன் மறுபிறவியில் ப்ரசேதஸ் என்பவருக்கும் விருக்ஷங்களின் கன்யகையான மாரிஷா என்பவளுக்கும் அப்பெயருடனே புத்ரனாகி யாகம் செய்தார், தேவிக்குப் பிரியத்தைச்செய்வதற்காக அந்த வேள்வியையும் அழித்தார்

37. 102. ஸாங்க்ய மதத்தில் கூறப்படும் பிரகிருதியும் வ்யாசர் கூறும் தத்துவமாயு மிருப்பவர் அல்லது முக்தியையளிக்கும் அவ்யக்த லிங்கமாயிருப்பவர். பக்தியையளிப்பது வ்யக்தலிங்கம். முக்தியையளிப்பது அவ்யக்தம். புக்தி முக்தியளிப்பது வ்யக்தாவ்யக்த லிங்கம்.

முக்தியளிப்பது அவ்யக்தம். புக்தி முக்தியளிப்பது வ்யக்தாவ்யக்த லிங்கம்.

38. 103. ஸுவர்ண க்ஷேத்ரத்தில் ஸஹஸ்ராக்ஷேச்வரர் என்று ப்ரசித்தமானவர்.

39. 104. உலகைக்காக்க பல்லாயிரம் கிரணம் வாய்ந்த ஸூர்யனாயிருப்பவர். அல்லது விச்வரூபியாயிருப்பவர்.

40. 105. வாக்மநது முதலிய அவயவங்களில் தேவதோபாஸனை செய்யும் ப்ரதீக கோபாஸகர்களுக்கு ஸாலோக்ய முக்தியையும், ஸகுணமூர்த்தி

களில் நான் என அஹங்க்ரஹோபாஸகர்களுக்கு ஸாயுஜ்ய முக்தியையும் தனக்குள் விளங்கும் ஆத்மாவுக்குத் தான் ப்ருத்யனென உபாஸிக்கும் ப்ருதகோபாஸகருக்கு ஸாரூப்யத்தையுமளிப்பவர்.

41 101. பூமியைச்சுமக்கும் அநந்தனுகவும் இருக்கிறீர்.

---

## ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் தத்துவம்.

நிஷ்களமான லிங்கம் உள்ள ஒவ்வொரு ஆலயத்திலும் ஸகளமான இருபத்தைந்து மூர்த்திகளில் ஒன்றான ஸ்ரீ நடராஜ மூர்த்தியைக் காண்கின்றோம். ஸகல மூர்த்திகளிலும் சிறந்தது நடராஜ மூர்த்தி என அறிய கிடக்கின்றது. நடனம் செய்வதால் அதற்கு நடராஜமூர்த்தி நடேசமூர்த்தி தாண்டவமூர்த்தி நடனசபாபதி, என்பது போன்ற பல பெயர்கள் தோன்றின. நடனம் செய்யும் இடத்திற்கு சபை என்று பெயர். பிரதி தினமும் ஸாயங்கால வேளையில் சகல பூதப்ரேத பிசாசங்களையும் அடக்கி உலகிற்கின்பமூட்டும் பொருட்டு பகவான் தாண்டவமாடுகிறார். இவ்வானந்தத் தாண்டவத்தைத் தரிசிக்க ஸகல தேவர்களுமங்கு கூடுவதால் சாயங்காலத்தில் சிவாலயந் தவிர மற்ற ஆலயங்களைத் தரிசிக்கக் கூடாதென ஆகமம் கூறும். திருவாலங்காட்டில் ரத்னசபையிலும் சிதம்பரத்தில் கனகசபையிலும் மதுரையில் வெள்ளி சபையிலும் திருநெல்வேலியில் தாம்ப்ரசபையிலும் திருக்குற்றாலத்தில் சித்ர சபையிலும் நடனம் செய்ததால் இந்த ஐந்து க்ஷேத்திரங்களிலும் நடராஜ மூர்த்தி மிக விசேஷமானது. இந்த நடனம் பல வகைப்படும். ஒவ்வொரு க்ஷேத்ரத்தில் ஒவ்வொரு வகையான நடனம் செய்துளார். திருவாரூரில் அஸபா நடனமும், திருநள்ளாறில் உன்மத்த நடனமும் திருநாகைக் காரோணத்தில் பாராவார தரங்க நடனமும்

திருக்கோளிலில் பிருங்க நடனமும் திருவாய்மூரில் கமல நடனமும் செய்தார். இவை முறையே ஸப்தவிடங்க க்ஷேத்ர மெனப்படும். திருஆலங்காடு திருஆலவாய் குகாளர் திருகுற்றாலம் திருநல்ரம் திருநெல்வேலி திருமுல கன்பூண்டி பேரூர் திருவெண்காடு ஆகிய இந்த க்ஷேத்ரங்க ளில் சிதம்பரம் போல் நடராஜ மூர்த்தி விசேஷமாகும். இவைகளை ஆதி சிதம்பர மென்பர். திருப்பூவனம் கஞ்ஜ னூர் திருப்புத்தூர் ஆகிய இம்மூன்று ஸ்தலங்களிலும் கற் சிலை உருவமாக நடராஜ மூர்த்தி அமைந்துள்ளது. எல்லா விடங்களிலும் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது சிதம் பரமே. அந்த க்ஷேத்ரம் பஞ்ச பூதங்களில் முதன்மை யான ஆகாச லிங்க க்ஷேத்ரமாகும். பஞ்சபூதஸ் ருஷ் டியில் ஆத்மாவினிடமிருந்து முதலில் தோன்றியது ஆகாசம்.

அது இறைவனைப் போலவே எங்குமிருக்கிறது. எக் காலத்து மழிவதில்லை. சப்தம் என்ற ஒரு குணத்தைத் தவிர வேறு குணமோ ரூபமோ இல்லாதது. அவ்வாகா சத்திலும் சிறந்தது சின்மயமான ஆகாசம். வெட்ட வெளி யாய் நிர்மலமாய் ஆனந்த வடிவாய் எங்கும் நிறைந்ததாக உள்ளது பரமாத்ம ஸ்வரூபம். அது உலகைப் படைக்க வேண்டும் என்று எண்ணிய மனோ விருத்தியே நடனம். அசைதல். அந்த நடனம் செய்கிறவரே நடராஜ மூர்த்தி. ஸமஷ்டியான சிதா காசத்தில் அசைவது போல் வ்யஷ்டி யான ஒவ்வொரு ஜீவனது ஹ்ருதய ஆகாசத்திலும் ஜீவன் வடிவனாகயிருந்து தான் அசைய கரசரணாதி அவயவங்க ளும் கண் காது முதலிய அறிவின் புலன்களும் வாக் பாணி முதலிய தொழிலிந்திரியங்களும் அசைகின்றன. உலகில் அண்டத்திலுள்ளபடி பிண்டத்திலும் நடைபெறுகிறது. ஆதலால் ஸகுணமாக (பேரமாக)த் தோன்றிய மூர்த்தி களில் முதலில் தோன்றிய மூர்த்தி நடராஜ மூர்த்தியென எங்கும் அம்மூர்த்தி சிறந்ததாகக் கொண்டாடப்படுகிறது. ஸ்திதியிலும் மரணத்திலும் தோன்றுவது போல ஸ்ருஷ்

டியில் அவ்வளவு துன்பமில்லை. சிறிது காலமே தாயிக்கும் சேயிக்கும் துன்பம். குழந்தை முகத்தைப் பார்த்தவுடன் இன்பமே அதிகரிக்கின்றது. ஸம்ஸாரத் துன்பத்தை அனுபவிப்போர் இன்பவடிவனான நடராஜனைத் தரிசிப்பது மிகவும் சிறந்ததாம். அன்றியும் கர்மமேகதி என்ற மீமாம்ஸக ஸித்தாந்தத்தைத் தழுவிய தாருகாவநவாஸிகளுக்கும் அன்பைப் புகட்டக் கருதினார் சிவன். பிறந்த வண்ணமோ இறக்கிறோம். எண்சான் உடலில் ஒரு சாண் வயிற்றைக் கழுவ இரந்துண்ணல் போதாதோ? என எடுத்துக் காட்ட ஒரு சாண் துணியுமின்றி பிக்ஷாடக மூர்த்தியாக வந்தார். தத்துவ மறியா தாருகவன முனிவர் ஸர்வேசனைச் சிக்ஷிக்கக் கருதினர். கர்மகாண்டபடி ஆபிசாரம் செய்தனர். தீயிலிருந்து வந்த புலியைக் கிழித்து ஆடையாக அணிந்தார் பகவான். ஸர்பத்தை அனுப்பினர். அதை ஆபரணமாக பூண்டார். செந்தீயை கரத்தி லேந்தினார்.

அபஸ்மார மெனும் அரக்கனைக் காலின் கீழே தள்ளினார். ஆபிசார மந்த்ரங்களான உடுக்கையைக் கரத்தில் வைத்துக் கொண்டார். ஹிம்சை என்னும் புலியைக் கொன்று ஸர்ப்பமெனும் ஆக்ரஹத்தை ஆபரணமாகப் பூண்டு தீயெனும் கோபத்தை அடக்கி, அக்ஞான மெனு அரக்கனைக் கரலால் உதைத்துப் பஞ்சாக்ஷர வடிவனாக ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் திரோதாநம் அநுக்ரஹம் என்ற ஐந்தொழிலைக் கைக்கொண்டு ஆனந்த வடிவனாகி மஹரிஷிகளைத் தடுத்து ஆட் கொண்ட மூர்த்தி நடராஜ மூர்த்தி. ஆதலால் நம்மைத் துன்பக் கடலில் தள்ளும் காமக் ரோதங்களையும் அக்ஞானத்தையும் அகற்றி மெய்க்ஞானம் தந்து பேரின்பக் கடலில் சேர்க்கும் நடராஜ மூர்த்தியைத் தரிசித்தல் வேண்டும். சக்தி அல்லது மாயையைக் கைக்கொண்டு கிரியா சக்தியுடன் உலக ஸ்ருஷ்டியில் ஈடுபடுவது நடராஜரையும் ஞானசக்தியையும் கிரியாசக்தியையும் ஸமமாகக் கருதி ஸ்ருஷ்டிக்கு முந்தி உள்ள ஸகல நிஷ்களமான ஸதாசிவ மூர்த்தியே லிங்கமாம். ஞான சக்தி

யையும் உட் கொண்டு லயத்தில் சிவ தத்துவ மென அழைக்கப்படுவது நிஷ்களமான பரமாத்மஸ்வரூபமாம். பிரும்மோத்ஸ்வ காலத்தில் நடராஜமூர்த்தி கிளம்பி தீர்த்த வாரியன்று உலக வடிவமான ரதத்தை கொளுத்துகிறார். அன்று தீர்த்தவாரி உத்ஸவம் அதாவது பிருதிவியை எரித்து ஜலமாக்கி லயக்ரமத்தைக் காட்டுகிறார், ஸகல ஜகத்தும் லயமாகி இறைவனிடத்தில் ஒன்றாகச் சேர்கிறது. சேருமிடம் பரமாத்மஸ்வரூபம்.

---

## விபூதி மஹிமை.

சிவனை ஸேவிக்கச் சிவசின்னத்துடன் செல்ல வேண்டும். அது விபூதியும் ருத்ராக்ஷமுமாம். விபூதியை வர்ணிக்காத உபநிஷத்தும் புராணமும் ஸ்மிருதியுமில்லை. துர்வாஸர் நெற்றிக்குநீர் அணிந்து சென்றார். நரகத்திலுள்ளோர் கூக்குரலைக்கேட்டு கீழே குனிந்தார். அந்த விபூதி சிறிது நரகத்திலுள்ளோர் மீது சிந்தித்து. உடனே அங்குளோர் துக்கமகன்றது. நரகமேஸ்வர்க்கமானது என ஸ்காந்தம் கூறுகிறது. அவ்விபூதியின் பெருமையை உணர்ந்து விதிப்படி அணிந்தால் எத்தகைய பயனுண்டாகும் என கூறவும் வேண்டுமா? உடல் நலமில்லாதவர் ஜலஸ்நானம் செய்ய முடியாதவர் விபூதி அணிந்தால் அது ஆக்நேயஸ்நானமாகும். கர்மாக்களைச்செய்ய அவன் அர்ஹதை உள்ளவனாகிறான். என தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது.

ஒவ்வொரு வைதிக கர்மாவிற்கும் பூர்வாங்கமாக விபூதி தாரணம் விதிக்கப்படுகிறது. அக்னியில் செய்யப்படும் கர்மாவின் முடிவில் அந்த பஸ்மாவைத் தரிக்க வேண்டும். மிக பவித்திரமும் அவச்யமும் ஆனதால் ஆசமநம்போல் கர்மாவிற்கு முன்னும் பின்னும் விபூதியைத் தரிக்கும்படி தர்ம நூல் கூறுகிறது. ஆசௌசமெனும் தீட்டு காலத்தில் கூட ஸந்த்யாவந்தனம் போல் நித்யம் விபூதி தாரணம் விதிக்கப்படுகிறது.

---

# விபூதியின் பெயரும் உத்பத்தியும்.

விபூதி, பஸ்மா, க்ஷாரம், பஸிதம், ரக்ஷா, என ஐந்து பெயர்கள் இதற்கு உண்டு. ஒவ்வொன்றும் காரணப் பெயரேயாம். நச்வரமான இவ்வுலகத்து செல்வத்தையும் தருவதால் ஒப்பற்ற செல்வம் என்ற பொருளைப் போதிக்கின்றது விபூதி என்ற சொல். பாபங்களை அகற்றுவது என்ற பொருள் கொண்டது பஸ்மா என்ற பதம். ஸகல ப்ராணிகளின் ஸகல விதமான துக்கத்தையும் அகற்றுவதால் க்ஷார மெனப்படும். அக்ஞான இருளை அகற்றி ஆத்ம ஞானத்தை ப்ரகாசப்படுத்துகிறது என்ற பொருள் கொண்டது பஸிதம் என்ற பதம்.

ஸகல பூதப்ரேதசேஷ்டைகளையும் அகற்றி நம்மைக் காப்பதால் ரக்ஷா என்று பெயர். இப்பெயருக்கேற்க நோயாலல்லது பேயால் பீடிக்கப்படுவோர் பெரியோரிடம் விபூதி மந்திரித்து அணிவதைக் காண்கிறோம். இதன் உத்பத்தியை உபநிஷத் வர்ணிக்கிறது. பசுவின் உடலில் சகல தேவர்களும் வாசம் செய்கின்றனர். அதன் சாணியில் ஸாக்ஷாத் மஹாலெக்ஷ்மி வசிக்கிறாள், அந்த கோமயத்தை எடுத்து உலர்த்தி சிவராத்திரி அன்று விரஜா ஹோமம் செய்து தீயிலிட்டு அதிலிருந்துவரும் பஸ்மா ஒரு வகை. யாகம் செய்பிறவாது அக்னியிலிருந்து உண்டாகும் பஸ்மா மற்றோர் வகை. இவ்விரண்டையும் எல்லோரும் தரிக்கலாம். அவரவர் ஔபாஸனத்திலுண்டாகும் பஸ்மா ஒரு வகை, இதை அவரும் அவரது வர்க்கமுமே இட்டுக் கொள்ளலாம். மற்றவர் அதை இடக்கூடாது. இயற்கையாக சில விடங்களில் பிரும்ம குண்டம் (பிரும்மா யாகம் செய்த விடம்) போல கிடைக்கும் பஸ்மா ஒரு வகை. இவைகள் கிடைக்காவிடில் சிவாலயத்திலுள்ள யாகசாலையிலிருந்து பஸ்மா எடுத்துக் கொள்ளலாம்.

---

## விபூதி எப்படி தரிப்பது?

ஜலத்தில் குழைக்காமல் இடுவது உத்தூளனம். ஜலத்துடன் சேர்த்துக் குழைத்திடுவது ஒரு வகை. முதலில் உடலில் பூர்ணமாக உத்தூளனம் செய்துக் கொண்டு பிறகு ஜலத்துடன் சேர்த்து அணிய வேண்டும். மூன்று ரேகைகள் தனித்தனி தெரியும்படி தரிக்க வேண்டும். உத்தூளன காலத்தில் மேலே தலையை அண்ணார்ந்து விபூதி இட வேண்டும். அங்கிருந்து சிந்தும் பஸ்ம கீழேவிழாமல் நம்மீதே விழும். கீழே விழுந்தால் பற்பல பிறவி பசு பக்ஷி ஜன்மமுண்டாகும். முதலில் பவித்ர விரலாலும் ஆள்காட்டி விரலாலும் இரு ரேகைகளை இட்டு பிறகு சுட்டை விரலால் நடு ரேகையை இட வேண்டும் மென்பது, சில ரிஷிகளது அபிப்ராயம். இம்மூன்று ரேகைகளும் அகார உகார மகார வடிவமான பிரணவம். மும்மூர்த்திகள் கார்ஹ பத்ய ஆஹவ நீயம் தக்ஷிணாக்நி. ருக்யஜுஸ்ஸாம என கருத வேண்டும் இதை அணிய சில வேதாந்த மந்தரங்களும் உண்டு, ஜலம் மஹாவிஷ்ணு, அதை விட்டு குழைக்க வேறு மந்தரம் உளது. வேதமறியாதார் பஞ்சாக்ஷரியைக் கூறி அணியலாம். அதுவும் உபதேசிக்கப்படாதவர் சிவநாமாவைச் சொல்லி அணியவேண்டும், த்ரிபுண்ட்ரமணிவதற்காகவே நெற்றி அகலத்தில் அமைந்துள்ளது. மும்மூர்த்திகளும் சகல தேவர்களும் விபூதி அணிந்திருக்கின்றனர். விபூதியால் பலர் நோய்கள் அகற்றியதை அடியார் சரித்திரத்தில் காணலாம்.

---

## விபூதியின் தத்வார்த்தம்

பசு என்பது ஜீவராசிகள். அதன் சாணமென்பது மலம், விரஜா ஹோமம் என்பது மலத்தை எரிக்கும் ஞானக்நியாம். ஞானக்நி மலத்தை அல்லது கர்மத்தை எரித்த பின் வெண்மை நிறம் வாய்ந்த பஸ்ம சுத்த ஸத்வா

ஞானமாம். அதை நாம் அணிவது ஜீவனிடத்துள்ள சகல உபாதிகளேயும் களேந்து சிவஸ்வரூபத்தில் சிவோஹம் என சிவனிடம் சேருவதாகும். எல்லாவஸ்துக்களேயும் நன்கு எரித்தால் வெளுப்பான பஸ்மமாகத்தான் அவை மாறும். ஆனுல் வியவஹாரதசையில் அவை வெவ்வேறு நாமம் வெவ்வேறு உருவம் உள்ளது. அவை எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்பது ஸத்யமான பஸ்மமே, அங்ஙனம் உலகம் வேறுபடினும் உள்ளே உள்ளது அழியாத ஸதவ ஞான மயமான சிவனே யாவன், நாமரூபமற்றவுடன் நிஜஸ்வரூபமான் சிவனே மிஞ்சுகிறது. அந்த சிவனே நான் என்ற அபேதமான எண்ணத்துடன் விபூதி அணிய வேண்டும், அந்த முடிவையே நாம் பெறவேண்டும், அத்தகைய வேதாந்த விவேகமற்றவருக்கு 'முடிசார்ந்த மன்னராயினும் முடிவில் ஒரு பிடி சாம்பலாவது கண்டீர்' என்ற சான்றோர் சொற்படி உலகவாழ்க்கை சாச்வதமல்ல என்று எண்பிக்கின்றது பஸ்மா. அத்தகைய மஸ்மாவை எப்போதும் அணிய வேண்டும், விசேஷமாக கர்ம காலம், பூஜா காலம் ஆலய ஸேவா காலமாகியவைகளில் விபூதி தாரணம் அவசியமாம். சிவ த்விஜரைத்தவிர மற்றவர் கையால் விபூதியைக் கொடுக்கவுங்கூடாது அதைப்பிறர் வாங்கவுங்கூடாது. நாபிக்குக்கீழ் இடுப்பில் ஸம்புடத்தில் வைத்த பஸ்மா சிலாக்யமல்ல.

---

## ருத்ராக்ஷ தாரணம்.

விபூதிதாரணம் போல் ருத்ராக்ஷ தாரணமும் செய்ய வேண்டிய சிவபக்தர் அவச்யம் வேண்டிய கார்யமாம். அது சிவசின்னமாம். ருத்ராக்ஷத்தின் பெருமையை விளக்க ஸ்காந்தத்தில் பற்பல கதைகள் கூறப் பட்டிருக்கின்றன. இதைத் தரிப்பது வெளிவேஷமேயன்றி பயனுண்டோ என ஒரு அரசன் கேட்க, துறவி ஒருவர் ஒரு பூனைக்குட்டியின் கழுத்தில் ருத்ராக்ஷத்தைக் கட்டி மேலே எறிய, தேவேக்

திரன் அதை வரவேற்றுப் பூஜை செய்து புஷ்பக் விமானத்திலேற்றி அத்துடன் தானும் துறவியிடம் வந்து யாது வேண்டும் என கைக்கட்டி வாய் புதைத்துநின்றார் என்று ஒரு கதை கூறுகிறது. ருத்ராக்ஷத்தைத் தரித்துக் கொண்டே ஒருவன் உயிர் நீங்கினால் அவனது சகலபாபங்களும் அகலும். அவன் நற்கெதி அடைகிறான். ஸுவர்ணத்தின் அம்சம் தனிடமிருப்பதால் ருத்ராக்ஷ தாரணம் நோயை அகற்றுகிறது. ருத்ரனுடைய அக்ஷிகளிலிருந்து தோன்றியதால் ருத்ராக்ஷமெனப்படுகிறது. பரமசிவன் அரிய ரதம் அம்பு முதலியவைகளைக் கொண்டு முப்புரத்தை எரித்தார். அச்சமயம் ஸோமன் சூர்யன் அக்னி என்ற 3 அக்ஷிகளிலிருந்தும் ஆனந்த நீர் பெருகிற்று. அங்கிருந்து ருத்ராக்ஷம் 38வகையாகத் தோன்றின. சூர்யனிடமிருந்து கபில வர்ணமாக 12 சந்திரனிடமிருந்து வெளுப்பாக 16 அக்னியிடமிருந்து கறுப்பாக 10 அமைந்துள்ளது அதை நாம் தரிக்க வேண்டும் என்றே இறைவனதை இடையில் துவாரத்துடன் படைத்தார். ஒரு முகம் முதல் 14 முகம் வரை ருத்ராக்ஷங்கள் உண்டு. ஏகமுக ருத்ராக்ஷம் ஒன்றுன பரமாத்மஸ்வரூபம். பிரும்மஹத்தி பாபத்தை போக்குமது. 2 முகம் உமாமஹேச்வர ஸ்வரூபம். பாபத்தை அகற்றும். 3 முகம் உள்ளது அக்னி. ஸ்தீரீ ஹத்தி தோஷத்தை போக்குவது. 4. சதுர்முகம். அது நரனைக் கொன்ற பாபத்தை அகற்றும் 5. முகம் பரமசிவன். பூஜிக்கத் தகாததைப் பூஜித்ததாலுண்டாகும் பாபத்தை போக்கும். 6. முகம் ஷண்முகன். பிரும்மஹத்தியைநீக்கும். 7. அநங்கன். ஸ்வர்ணத்தைத் திருடிய பாபத்தை அகற்றும். 8. விநாயகன் அதனால் குருபத்நீக மனதோஷமகலும். 9. பைரவர். சிசு ஹத்தி பாபம் நீங்கும். 10. மஹாவிஷ்ணு, அதனால் பிசாசாதி பீடை அகலும். 11. ஏகாத சருத்ரம். அதனால் அச்சவமேத பலன் வரும். 12. துவாதசாதித்யர். அதனால் கோமேத பலனுண்டாகும். 13. கார்த்திகேயன். ஸர்வ சித்தியுமுண்டாகும். 14. ஸதாசிவன். ஸர்வ பாபமுமகலும். தலையில் 26. கழுத்தில் 100 அல்லது 50 இருபுஜங்களிலும் 16-16 ஆக 32. இருமணி

பந்தங்களிலும் 12–12 ஆக 24. இவைகளைத் தரித்துக் கொண்டு பூஜை ஜபம் முதலியன செய்தால் அழிவற்ற பலனைப் பெறலாம். ஸுவர்ணம் வெள்ளி தாம்பரம்பட்டு எருக்கை நார் ஆகியவைகளால் ருத்ராக்ஷத்தைக் கோர்த்து தரிக்க வேண்டும். மும்மூர்த்திகளும் சதா ருத்ராக்ஷத்தைத் தரித்திருக்கின்றனர். பூர்வஜன்ம புண்யமிருந்தால்தான் ருத்ராக்ஷ தாரணத்தில் புத்தி உண்டாகும். கண்ணாலதைப் பார்த்தால் புண்ணியமுண்டாகும். அதைத் தொழுவதில் கோடி புண்ய முண்டாகும். தரித்தால் நூறுகோடி புண்யம் உண்டாகும். ஸதா மாலை தரித்துக் கொள்வோர் அதை அசுத்தமான காலத்தில் யக்ஜோப வீதத்தை நிவீதமாக்கி காதில் தரிப்பது போல் சுத்தமான விடத்தில் வைத்துப் பிறகுதரிக்க வேண்டும். தரிக்கும் மாலையால் ஜபம் செய்யக் கூடாது. நெல்லிக்கனி அளவுள்ள ருத்ராக்ஷம் உத்தமம். இளந்தங்கனி போன்றது மத்யமம். கடலைப் போன்றது அதமம். மொத்தம் 300 தரிப்பது அதமம். 500 தரிப் பது மத்யமம். 1000 தரிப்பது உத்தமம். சிவனும் சிவையும் சேர்ந்திருப்பது போல் இரண்டு ருத்ராக்ஷம் சேர்ந்திருப் பது கௌரீ சங்கரமெனப்படும். அது எல்லா வற்றிலும் மிகமிக உயர்ந்ததாம். உயர்ந்த பரிசுத்தமான ருத்ராக்ஷத் தைக் கழுத்திலணிந்தால் ஸ்நான காலத்தில் அதன் மீது விழுந்த ஜலம் நம் உடலில் விழும். அது கங்கை போல் நம்மைப் பாவந மாக்குவதுடன் நோயை அகற்றி ஆரோக் யத்தையும் நீண்ட ஆயுளையும் அளிக்கும். சாணைக் கல்லில் உரைத்தால் பத்தரைமாத்துத் தங்கம் போல் இருக்கும் உயர்ந்த ருத்ராக்ஷம் ஜன்னி பிறந்தவருக்கு அதை தேனில் இழைத்துத்தருவது சான்றோர் முறை. நோயை அகற்றும். ஆயுள்முடிந்து ஒரு ஸமயம் இறந்தாலும் பாபத் தைப் போக்கும்மது. ஆதலின் அவச்யம் ஒரு ருத்ராக்ஷத் தையேனும் தரிக்க வேண்டும். பூஜா காலத்திலேனும் ஜபகாலத்திலேனும் ஆலயஸேவா காலத்திலேனும் ருத்ரா க்ஷத்தைத்தரிக்க வேண்டும்.

---

# ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹிமை.

ஒவ்வொரு மனிதனும் ப்ரதிதினமும் காலை மாலைகளில் பஞ்சாக்ஷரீ ஜபம் செய்ய வேண்டுமென தர்ம நூல் விதிக்கின்றது. பஞ்சாக்ஷரீ ஜபமில்லாதவர் சிவபூஜை வைச்வதேவம் முதலிய ஸத்கர்மங்களுக்கு அர்ஹரல்ல. சிஷ்டர் பஞ்சாக்ஷரீ ஜபமில்லாதவர் வீட்டில் உண்ணார். அவர் கையாலளிக்கும் நீரையுமருந்த மாட்டார். சிவாலயம் செல்வோர் ஸேவைக்கு முன்னும் பின்னும் பஞ்சாக்ஷரீ ஜபம் செய்ய வேண்டும். தக்ஷிணாமூர்த்தியினருகே அல்லது த்வஜஸ்தம்பத்தினடியே அமர்ந்து ஜபிக்க வேண்டும். வீட்டுப் பூஜையிலும் ஆரம்பத்திலும் முடிவிலும் அல்லது குரு உபதேசித்தப்படி ஒரு முறையாவது ஜபிக்கவேண்டும். ஜாதகர்மா நாமகரணம் உபநயநம் விவாஹம் போல் ஒவ்வொருவருக்கும் பஞ்சாக்ஷரீ ஜபம் ஒரு முக்கிய ஸம்ஸ்காரமாகும். பஞ்சாக்ஷரீ ஜபம் செய்து வரும் (தன் மனைவியான) காசி ராஜன் பெண்ணிடம் அவள் கணவன் ஏகாந்த க்ரீடைக்குச் சென்றபோது அவள் உடலிலிருந்து வந்த ஜ்வாலை அவள் கணவனைக்கிட்டே அணுகாதபடி தடுத்தது. அப்பஞ்சாக்ஷரீ மஹிமையை உணர்ந்து அவன் அதை உபதேசம் பெற்றார் என பிரும்மோத்ர கண்டம் கூறுகிறது. பஞ்சாக்ஷரீ ஜபிப்பவரைப் பேய் பிசாசு ஏவல் சூன்யம் அபஸ்மார நோய் முதலியன அணுகாது.

யஜுர் வேதத்தில் முன்னே $3\frac{1}{2}$ காண்டம் பின்னே $3\frac{1}{2}$ காண்டம் வைத்து நடுவில் ஸ்ரீருத்ரம் என்ற மஹாமந்திரத்திலே அமைக்கப் பட்டுள்ளது இப்பஞ்சாக்ஷரீ. இது உயர்ந்த மந்த்ரராஜனும், சிறந்த அழியாத தனமாம். சிந்தித்ததை அளிக்கும் சிந்தாமணி. அது ஹ்ருதயஸ்தாநமான ருத்ரத்தில் முன்னும் பின்னும் சில பாகங்களை அமைத்து நடுவில் வைக்கப்பட்டிருக்கிறது வேதத்திலுள்ளபடி கூறுவதை ஸ்தூல பஞ்சாக்ஷரீ என்பர். சக்தி பீஜத்துடன் சேர்த்தால் சக்தி பஞ்சாக்ஷரீ என்பர். முதல் பதத்தைப்

பின்னால் கூறுவதை ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரீ என்பர். காரண பஞ்சாக்ஷரீ என ஒரு வகை அமைப்பு. சிவ என்பது மஹாகாரண பஞ்சாக்ஷரீ எனப்படும். முதல் எழுத்து மஹாமநு எனப்படும். இந்த ஒவ்வொரு எழுத்தும் மஹா மஹிமை வாய்ந்தது. அபூர்வமான சக்தி வாய்ந்தது. ஸகல பாபங்களையும் போக்கவல்லது. மனிதர் கோறும் ஸகல ஸித்திகளையும் தருவது. இவ்வைந்தெழுத்தும் ஸதாசிவனது ஸத்யோஜாதம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஈசாநம் என்ற ஐந்து முகங்களாம். அவர் செய்யும் ஸ்ருஷ்டி ஸ்திதிலயம் திரோதாநம் அனுக்ரஹம் என்ற 5 தொழிலாம். அவர் படைத்த 5 பூதங்களாம். அவ்வைந்து பூதங்களாலுண்டான கண் காது மூக்கு நாக்கு த்வக்கென்ற 5 ஞானேந்த்ரியங்கள். வாக்பாணி - பாதபாயூ உபஸ்த என்ற 5 கர்மேந்திரியங்களாம்.

இங்ஙனம் எல்லாவற்றையும் தனக்குள்ளே அமையப் பெற்ற இம்மஹா மந்திரத்தைக் குரு முகமாக உபதேசம் பெற்று அதில் கூறப்பட்டத்யாநச் லோகத்தில் வர்ணித்தபடி பகவானை உள்ளத்திலே இருத்தி அங்கந்யாஸ கரன்யாஸங்களுடன் ஜபம் செய்வோர் இவ்வுலகில் சகல விதமான நன்மைகளையும் பெருவதுடன் மறு பிறவியிலும் உமாமஹேசர் அருளால் நற்பிறவி பெற்று சகலபோகபாக்யங்களையும் பெறுவர். வேதத்தை வேத மந்தரத்தை உபநயநம் ஆகாதவர் கூறக்கூடாது என வேதவிதி. இருந்தாலும் உலகில் தோன்றிய அனைவரும் நற்கதி பெற வேண்டுமென கருணை கொண்ட வேதத்தாய் வேத மந்த்ரமான பஞ்சாக்ஷரியை எல்லோரும் உபதேசம் பெற்று ஜபிக்க வேண்டும் என உத்தரவு செய்கின்றது. இஃதொன்றே பஞ்சாக்ஷரியின் பெருமையை விளக்க வல்லதன்றோ?

சுபம்

---

# ஸ்ரீசிவநாமாஷ்டோத்தரசத நாமாவலி.

ஓம் சிவாய நமஃ

,, மஹேச்வராய நமஃ

,, சம்பவே நமஃ

,, பினாகினே நமஃ

,, சசிசேகராய நமஃ 5

,, வாமதேவாய நமஃ

,, விரூபாக்ஷாய நமஃ

,, கபர்தினே நமஃ

,, நீலலோஹிதாய நமஃ

,, சங்கராய நமஃ 10

,, சூலபாணயே நமஃ

,, கட்வாங்கினே நமஃ

,, விஷ்ணுவல்லபாய நமஃ

,, சிபிவிஷ்டாய நமஃ

,, அம்பிகாநாதாய நமஃ 15

,, ஸ்ரீகண்டாய நமஃ

,, பக்தவத்ஸலாய நமஃ

,, பவாய நமஃ

,, சர்வாய நமஃ

,, திரிலோகேசாய நமஃ 20

,, சிதிகண்டாய நமஃ

,, சிவாப்ரியாய நமஃ

,, உக்ராய நமஃ

,, கபாலினே நமஃ

,, காமாரயே ஃ 25

,, அந்தகாஸுரஸூத னாய நமஃ

,, கங்காதராய நமஃ

,, லலாடாக்ஷாய நமஃ

,, கால காலாய நமஃ

,, கிருபா நிதயே நமஃ 30

ஓம் பீமாய நமஃ

,, பரசு ஹஸ்தாய நமஃ

,, ம்ருக பாணயே நமஃ

ஓம் ஜடாதராய நமஃ

,, கைலாஸவாஸினே நமஃ

,, கவசினே நமஃ

,, கடோராய நமஃ

,, திரிபுராந்தகாய நமஃ

,, விருஷாங்காய நமஃ

,, விருஷபாரூடாய நமஃ 40

,, பஸ்மோத்துளித விக்ர ஹாய நமஃ

,, ஸாமப்ரியாய நமஃ

,, ஸ்வரமயாய நமஃ

,, த்ரயீமூர்த்தயே நமஃ

,, அநீச்வராய நமஃ 45

,, ஸர்வஜ்ஞாய நமஃ

,, பரமாத்மனே நமஃ

,, ஸோமஸூர்யாக்னி-லோசனாய நமஃ

,, ஹவிஷே நமஃ

,, யஜ்ஞமயாய நமஃ 50

,, ஸோமாய நமஃ

,, பஞ்சவக்த்ராய நமஃ

,, ஸதாசிவாய நமஃ

,, விச்வேச்வராய நமஃ

,, வீரபத்ராய நமஃ 55

,, கணநாதாய நமஃ

,, ப்ரஜாபதயே நமஃ

,, ஹிரண்யரேதஸே நமஃ

,, துர்தர்ஷாய நமஃ

ஓம் கிரீசாய நமஃ 60
,, கிரிசாய நமஃ
,, அநகாய நமஃ
,, புஜங்க பூஷணாய நமஃ
,, பர்காய நமஃ
,, கிரிதன்வநே நமஃ 65
,, கிரிப்ரியாய நமஃ
,, கிருத்தி வாஸஸே நமஃ
,, புராராதயே நமஃ
,, பகவதே நமஃ
,, ப்ரமதாதிபாய நமஃ 70
,, ம்ருத்யுஞ்ஜயாய நமஃ
,, ஸூக்ஷ்மதநவே நமஃ
,, ஜகத்வ்யாபிநே நமஃ
,, ஜகத்குரவே நமஃ
,, வ்யோமகேசாய நமஃ
,, மஹாஸேநஜநகாய நமஃ
,, சாருவிக்ரமாய நமஃ
,, ருத்ராய நமஃ
,, பூதபதயே நமஃ
,, ஸ்தாணவே நமஃ 80
,, அஹிர்புத்ன்யாய நமஃ
,, திகம்பராய நமஃ
,, அஷ்டமூர்த்தயே நமஃ
,, அநேகாத்மநே நமஃ

ஓம் ஸாத்விகாய நமஃ 85
,, சுத்தவிக்ரஹாய நமஃ
,, சாச்வதாய நமஃ
,, கண்டபரசவே நமஃ
,, அஜாய நமஃ
,, பாசவிமோசகாய நமஃ 90
,, மிருடாய நமஃ
,, பசுபதயே நமஃ
,, தேவாய நமஃ
,, மஹாதேவாய நமஃ
,, அவ்யயாய நமஃ 95
,, ஹரயே நமஃ
,, பூஷதந்தபிதே நமஃ
,, அவ்யக்ராய நமஃ
,, தக்ஷாத்வரஹராய நமஃ
,, ஹராய நமஃ 100
,, பகநேத்ரபிதே நமஃ
,, அவ்யக்தாய நமஃ
,, ஸஹஸ்ராக்ஷாய நமஃ
,, ஸஹஸ்ரபாதே நமஃ
,, அபவர்கப்ரதாய நமஃ
,, அநந்தாய நமஃ
,, தாரகாய நமஃ
,, பரமேச்வராய நம

ஓம் தத் ஸத்ஃ

---

# श्री शिवनामाष्टोत्तरशतनामावलिः

ॐ शिवाय नमः ।
,, महेश्वराय नमः ।
,, शंभवे नमः ।
,, पिनाकिने नमः ।
,, शशिशेखराय नमः ।
,, वामदेवाय नमः ।
,, विरूपाक्षाय नमः ।
,, कपर्दिने नमः ।
,, नीललोहिताय नमः ।
,, शंकराय नमः । १०
,, शूलपाणये नमः ।
,, खट्वांगिने नमः ।
,, विष्णुवल्लभाय नमः ।
,, शिपिविष्टाय नमः ।
,, अंबिकानाथाय नमः ।
,, श्रीकंठाय नमः ।
,, भक्तवत्सलाय नमः ।
,, भवाय नमः ।
,, शर्वाय नमः ।
,, त्रिलोकेशाय नमः । २०

ॐ शितिकंठाय नमः ।
,, शिवाप्रियाय नमः ।
,, उग्राय नमः ।
,, कपालिने नमः ।
,, कामारये नमः ।
,, अंधकासुरसूदनाय नमः ।
,, गंगाधराय नमः ।
,, ललाटाक्षाय नमः ।
,, कालकालाय नमः ।
,, कृपानिधये नमः । ३०
,, भीमाय नमः ।
,, परशुहस्ताय नमः ।
,, मृगपाणये नमः ।
,, जटाधराय नमः ।
,, कैलासवासिने नमः ।
,, कवचिने नमः ।
,, कठोराय नमः ।
,, त्रिपुरान्तकाय नमः ।
,, वृषांकाय नमः ।
,, वृषभारूढाय नमः । ४०

ॐ भस्मोद्धूलितविग्रहाय नमः ।
,, सामप्रियाय नमः ।
,, स्वरमयाय नमः ।
,, त्रयीमूर्तये नमः ।
,, अनीश्वराय नमः ।
,, सर्वज्ञाय नमः ।
,, परमात्मने नमः ।
,, सोमसूर्याग्निलोचनाय नमः ।
,, हविषे नमः ।
,, यज्ञमयाय नमः । ५०
,, सोमाय नमः ।
,, पंचवक्त्राय नमः ।
,, सदाशिवाय नमः ।
,, विश्वेश्वराय नमः ।
,, वीरभद्राय नमः ।
,, गणनाथाय नमः ।
,, प्रजापतये नमः ।
,, हिरण्यरेतसे नमः ।
,, दुर्धर्षाय नमः ।
,, गिरीशाय नमः । ६०
,, गिरिशाय नमः

ॐ अनघाय नमः ।
,, भुजंगभूषणाय नमः ।
,, भर्गाय नमः ।
,, गिरिधन्वने नमः ।
,, गिरिप्रियाय नमः ।
,, कृत्तिवाससे नमः ।
,, पुरारातये नमः ।
,, भगवते नमः ।
,, प्रमथाधिपाय नमः । ७०
,, मृत्युंजयाय नमः ।
,, सूक्ष्मतनवे नमः ।
,, जगद्व्यापिने नमः ।
,, जगद्गुरवे नमः ।
,, व्योमकेशाय नमः ।
,, महासेनजनकाय नमः ।
,, चारुविक्रमाय नमः ।
,, रुद्राय नमः ।
,, भूतपतये नमः ।
,, स्थाणवे नमः । ८०
,, अहिर्बुध्न्याय नमः ।
,, दिगंबराय नमः ।

ॐ अष्टमूर्तये नमः ।
,, अनेकात्मने नमः ।
,, सात्विकाय नमः ।
,, शुद्धविग्रहाय नमः ।
,, शाश्वताय नमः ।
,, खंडपरशवे नमः ।
,, अजाय नमः ।
,, पाशविमोचकाय नमः ।
,, मृडाय नमः ।
,, पशुपतये नमः ।
,, देवाय नमः ।
,, महादेवाय नमः ।
,, अव्ययाय नमः ।

ॐ हरये नमः ।
,, पूषदंतभिदे नमः ।
,, अव्यग्राय नमः ।
,, दक्षाध्वरहराय नमः ।
,, हराय नमः । १००
,, भगनेत्रभिदे नमः ।
,, अव्यक्ताय नमः ।
,, सहस्राक्षाय नमः ।
,, सहस्रपादे नमः ।
,, अपवर्गप्रदाय नमः ।
,, अनंताय नमः ।
,, तारकाय नमः ।
,, परमेश्वराय नमः । १०८

ओं तत् सत्

---